குருஃவ துணை

# கீரநத்தம் தோத்திரத்திரட்டு

ஆசிரியர்

சிரவையாதீனம்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

உரையாசிரியர்

சிரவையாதீனக் கவிஞர்

பெரும்புலவர் ப.வெ.நாகராஜன்

பதிப்பாசிரியர்கள்

சிரவையாதீனப்புலவர்

கு. சிவலிங்கம்

தமிழாசிரியர்

நா. செந்தில்குமார்

கீரநத்தம் அருள்மிகு தண்டபாணித் திருக்கோயில்

திருக்குடநன்னீராட்டுப் பெருவிழா வெளியீடு

12.10.2018

வெளியீடு

சிரவைக் கௌமாரசபை

சிரவையாதீன
வெளியீட்டு எண் : 376

நூல் பெயர் : கீரநத்தம் தோத்திரத்திரட்டு

ஆசிரியர் : சிரவையாதீனம் இரண்டாம்
குருமகாசந்நிதானம்
தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

உரையாசிரியர் : பெரும்புலவர் ப.வெ.நாகராஜன்

பதிப்பாசிரியர் : சிரவையாதீனப்புலவர் கு. சிவலிங்கம்
நா. செந்தில்குமார், தமிழாசிரியர்

வெளியீட்டு நாள் : கீரநந்தம் அருள்மிகு தண்டபாணிக்கடவுள்
திருக்கோயில் திருக்குட நீராட்டு மற்றும்
தவத்திரு மருதாசல சுவாமிகள்
62 ஆம் ஆண்டுக் குருபூசை வெளியீடு

12.10.2018, வெள்ளிக்கிழமை

படிகள் : 500

விலை : ரூ. 40.00

அச்சிட்டோர் : சௌமி அச்சகம்
சரவணம்பட்டி, கோவை - 641 035.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம் : தலைவர்,
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி, கோவை - 49.
தொலைபேசி : 0422-2666370



**தவத்திரு. குமரகுருபரசுவாமிகள்**
**சிரவையாதீனத்தலைவர்**

## ஆசியுரை

கீரநத்தம் என்னும் ஊர்ப்பெயர் இப்பொழுது கீரணம் என வழங்கப்படுகிறது. இவ்வூரில் விநாயகர் ஆலயங்கள், தவத்திரு மருதாசல சுவாமிகளால் நிறுவப்பெற்ற தண்டபாணி ஆலயம், கரிவரதராசர் ஆலயம், மாரியம்மன் ஆலயம், சென்னியாண்டவர் ஆலயம் முதலிய ஆலயங்கள் உள்ளன. இத்தலத்தைப் பற்றி சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள், கஜபூசைச் சுந்தர சுவாமிகள் ஆகியோர் மாலை, பதிகங்கள் பல பாடியுள்ளனர்.

தவத்திரு. இராமானந்த சுவாமிகள் அருளாட்சிக் காலத்தில் திருமடத்தில் திருமடத்திற்கு வந்து சென்றவர் மருதாசலனார் அவர்கள். அவர் தமக்குள்ள நோயை சுவாமிகளின் அருளால் குணமடைய வேண்டும் என்று வந்தவர். அதன்படியே மருதாசலனார் உடற்பிணி நீங்கி குணமடைந்தார். நாளடைவில் மருதாசலனார் தவநெறி பூண்டு விளங்கினார். தவத்திரு கந்தசாமி சுவாமிகளுக்கு ஆதீனத் தலைமை வழங்கப்பெற்ற 29.01.1923 அன்று திருப்பழனியில் இவருக்கும் தவத்திரு இராமானந்த சுவாமிகளால் கல்லாடை அளிக்கப்பெற்றது. 1932 ஆம் ஆண்டு தவத்திரு மருதாசல சுவாமிகள் கீரநத்தத்தில் கோயில் ஒன்றை நிறுவி விநாயகரையும், தண்டபாணிக்கடவுளையும் எழுந்தருளச் செய்து சிறப்பாகத்திருக்குட நன்னீராட்டு விழாவை நடத்தினார். இந்தத் திருக்கோயில் இப்போது சிரவையாதீனத்தின் ஆளுகையில் உள்ளது. அவர் தன் குருநாதர் இராமானந்த சுவாமிகளின் அருளாணைப்படியே வைத்தியராகவும் இருந்திருக்கின்றார். அவ்வூரில் உள்ள மக்கள் ஆலயத்திற்கு வந்து வணங்கி மருதாசல சுவாமிகளிடம் உடல்

நோயைப் பற்றி அவரிடம் கூற, அந்நோயைப் போக்குவதற்குரிய மருந்தையும் தீர்த்தத்தையும் கொடுத்து குணப்படுத்தியிருக்கிறார். தீராத நோய்களும் அவருடைய அருளால் நீங்கியது.

கீரநத்தத்தில் சுவாமிகள் இருந்த இடத்தை சுவாமி வீடு என்றே அழைப்பர். அவ்வூர் மக்கள் தினம்தோறும் காலையில் சுவாமி வீட்டிற்கு வந்து சுவாமிகளிடம் அருளாசி பெற்றுச் சென்று பின்புதான் உணவருந்தி பணிக்குச் செல்வதை வழக்கமாக கொண்டிருந்துள்ளனர். காலை வேலையில் சுவாமி வீட்டிற்கு மேல் தினம் கருடன் வட்டமிடும் என்பதையும் பலர் கூறியுள்ளனர்.

வெள்ளிக்கிழமை தோறும் தவறாமல் சவாரி வண்டியில் திருமடத்திற்கு வருகை புரிந்து பணிகள் செய்துள்ளார். வருகின்ற பொழுது திருமடத்தின் எல்லையாகிய நுழைவாயிலுக்கு வரும்பொழுதே அடியார்கள் திருமடத்திற்கு எவ்வாறு வரவேண்டுமோ அந்தக் கொள்கையுடன் முறைப்படி மேல்சட்டையில்லாமல், வேட்டியும், இடுப்பில் துண்டும் கட்டிக்கொண்டு வருவார். அவருடன் வரும் அடியார்களும் அவ்வாறே வரவேண்டும். திருமடத்தில் வெள்ளிதோறும் நடைபெறும் சொற்பொழிவினைக் கேட்டு வழிபாடு முடிந்தபிறகுதான் செல்வார். அவரும், தன்னுடன் வரக்கூடியவர்களும் திருமடத்தில் உண்ணக்கூடாது. எதையும் எடுத்துச் செல்லக்கூடாது. அதுமட்டுமல்லாமல் ஒவ்வொரு முறை வரும்பொழுதும் திருமடத்திற்குப் பொருளுதவியும் செய்து வந்துள்ளார்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் கீரணத்தலத் தொடர்பாக விநாயகர் பதிகங்கள் நான்கு, விநாயகர் எழுபா, சப்தகம் ஒன்று, தண்டபாணி மாலை ஒன்று,குமரகுருபரன் பதிகம் ஒன்று, குமரகுருபரன் சட்கம் ஒன்று, கரிவரதராஜர் பதிகம், ஸ்ரீ காளிங்க நர்த்தன பதிகம், கரிவரதராஜன் பஞ்சகம், மாரியம்மன் பதிகம், ஸ்ரீமதி பச்சையம்மாள் தீர்த்தக் கிணற்றுப் பதிகம், திருப்புகழ்ப்பாக்கள் (விநாயகர் - 3, முருகன் - 1, திருமால் - 2) மாகாளியம்மன் துதி, மங்கையம்மன் துதி, உத்தண்டராயர் துதியாக ஒவ்வொரு பாடல்கள், வாழ்த்துப்பாக்கள் நான்கு என

மொத்தம் 184 பாடல்களை இயற்றியுள்ளார். 1932, 1943, 1945, 1946 மற்றும் 2006 ஆகிய ஆண்டுகளில் பகுதிபகுதியாக சில பதிகங்கள் வெளியாகி உள்ளன.

இந்நூலின் உரையாசிரியர் சிரவையாதீனக் கவிஞர் பெரும்புலவர் ப.வெ.நாகராஜன் அவர்கள் கந்தமுனி போற்றும் கவின்மிகு தலங்கள் என்னும் தலைப்பில் கீரநத்தம் கோயில் பதிகங்கள் பற்றிக் குறிப்பிடுகையில் ''கீரநத்தம் பிரபந்தங்கள் (184 பாடல்களையும்) குறிப்புரையுடன் ஒரே நூலாக வெளியிட ஏற்ற முறையில் பதிப்புப் பணிகளை முடித்து வைத்துள்ளேன். தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் பால் மெய்யன்புடைய யாரேனும் ஒருவர் இதனை வெளியிட முன்வருதல் சிறந்த குருசேவையும், கடவுள் தொண்டும், தமிழ்ப்பற்றும் ஆகும். செந்தமிழ்க்கந்தன் திருவருள் புரிவானாக'' எனக் குறிப்பிட்டுள்ளார். அவருடைய மறைவுக்குப்பின் அவருக்கு காணிக்கையாக்கும் வகையில் இந்நூல் முழுமையும் வெளிவருவது மகிழ்ச்சிதருவதாக உள்ளது.

சிரவையாதீனக் கவிஞர் ப.வெ.நா அவர்களின் எண்ணம் நிறைவேற நூலின் பதிப்புப் பணியை மேற்கொண்டு பதிப்பித்த சிரவையாதீனப்புலவர் திரு. கு. சிவலிங்கம் அவர்கள், மற்றும் நம் பள்ளித் தமிழாசிரியர் திரு. நா. செந்தில்குமார் அவர்கள். திருக்கோயிலின் நித்தியப்படி பூசை செய்துவருபவர் திரு. பழனிவேல்சாமி அவர்கள். நூல் வெளிவர பொருளுதவியை மனமுவந்து செய்தவர்கள் பழனிவேல்சாமி - சுப்பாத்தாள் இணையரின் மகன் திரு. பி. பாலதண்டபாணி மற்றும் கந்தசாமி - பழனியம்மாள் இணையரின் மகன் திரு. சக்திவேல் ஆகியோராவர். நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்தவர், சரவணம்பட்டி சௌமி அச்சகம், திரு. தே. திருஞானசம்பந்தம் அவர்கள். அனைவரும் தண்டபாணிக்கடவுளின் தண்ணருள் பெற்றிட வாழ்த்துகின்றோம்.



தேவருக்கு இடையூறு யாவும்
தீர்த்த மெய்த் தேவா போற்றி
மூவருக்கு அரசளித்த
முதன்மை நற்பொருளே போற்றி
சேவடிக்கு அடிமை ஆக்கிச்
சிறியனேன் தன்னைக் காப்பாய்
மேவிய புகழ்படைத்த
விக்கின ராசா போற்றி போற்றி!!

# கீரநத்தம் தோத்திரத்திரட்டு



## பெரும்புலவர் ப. வெ. நாகராஜன்

**பெரும்புலவர் ப. வெ. நாகராஜன்**
அவர்கள் உரை எழுதிய
**கீரநத்தம் தோத்திரத்திரட்டு**
எனும் நூல் (12.10.2018)
கீரநத்தம் அருள்மிகு தண்டபாணித் திருக்கோயில்
திருக்குடநன்னீராட்டுப் பெருவிழா அன்று
அவரது நினைவாக வெளியிடப்படுகிறது.

## கீரநத்தம் கௌமார தொண்டர்கள்



சடையப்ப கவுண்டர்



கிருஷ்ண கவுண்டர்



சுப்பராய கவுண்டர்



ராமசாமி கவுண்டர்



பழனிவேல்சாமி
S/o. சுப்பராய கவுண்டர்



K.R. சுந்தரம்
(ராம்நகர்)







ஆவணி மாதம் 31 ஆம் நாள் (16.09.1998)
திருக்குடநன்நீராட்டு நிகழ்வு



தவத்திரு. நஞ்சப்ப சாமிகள்
கீரநத்தம்

# 1.கீரநத்தம் விநாயகர் பதிகம்

காப்பு
(வெண்பா)

1. **ஓரநத்தம் அன்பரிடம் ஒன்றா தருள்புரிவான்**
**கீரநத்தத் தென்றும் கிளர்கிருபைக் - காரன்;அத்தம்**
**ஐந்தர் கணபதித்தே ஆன்றதுதிக் கேன்றதுணை**
**வந்தான் அவன்தாள் மலர்.**

பொழிப்புரை : அடியார்களுக்கு எந்தத் தீங்கும் எய்தாமல் பாதுகாப்பதற்காகக் கீரநத்தப் பதியில் எந்நாளும் திருக்கோயில் கொண்டு விளங்குகின்ற கருணையை உடையவரும், ஐந்து கைகளை உடைய இறைவனும் ஆகிய கணபதிக்குரிய சிறப்பமைந்த தோத்திரப் பதிகத்திற்குப் பொருத்தமான காப்பாவது (அடியார்கள் அழைக்கின்ற போதெல்லாம்) எழுந்தருளி ஆட்கொள்கின்ற அந்த விநாயகரின் திருவடித் தாமரைகளே ஆகும்.

குறிப்புரை:- **ஓர் அநத்தம்** - அருள்புரிவான்- அருள்வதற்காக. ஐந்து ஆர். மலரே எனப் பிரிநிலை ஏகாரம் விரித்துக் கொள்க. **தாள்மலர்** - பெயர்ப்பயனிலை. முதல் இரண்டடிகளில் விக்னேஸ்வரன் என்னும் பெயர்க்காரணம் விளக்கப்பட்டது. மேலும் இறைவன் திருமேனி கொண்டு எழுந்தருளிருப்பது அவனுடைய எல்லையற்ற கருணையாலேயே என்பதை உணர்த்தப்பட்டது. அவன் அருளாலே தற்போதம் நீங்கிப் பக்தியுடன் பாடப்படும் தோத்திரம் சிறப்புடையதாக இருக்கும் என்பதால் ஆன்ற துதி எனப்பட்டதே அன்றி, நூலாசிரியரின் கல்விச் செருக்கால் அன்று. இது இப்பதிகத்தின் பதின்மூன்றாவது பாடலாலும் விளங்கும்.

நூல்
(எழுசீர் விருத்தம்)

2. **ஏழிசை மறைஆ கமம்முதல் கலைகள்**
**எழும்இயல் தாரகப் பொருள்ஆம்**
**ஊழிநா யக!நின் திருவருட் காட்சி**
**உதவி,என் துயரம்என் றொழிப்பாய்?**

கேழில்சீர்க் கருணை மதநதிச் செம்பொற்
கிரிஎனக் கிளர்ந்துமிக் கின்பார்
பாழிமான் மியம்தோய் கீரநத் தப்பேர்ப்
பதிக்கண பதிப்பெருமானே!

பொழிப்புரை:- நிகரற்ற கருணை என்னும் மதப்புனல் ஆறாகப் பாய்கின்ற செம்பொன் மலையினைப்போல் விளங்கி, மிகுந்த இறையின்பத்தைத் துய்க்கின்ற முனிவரின் இருப்பிடமாகிய பெருமையைப் பெற்றுள்ள கீரநத்தம் என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள விநாயகக் கடவுளே! ஏழு கரங்களால் இயலும் இசையோடு நான்கு வேதங்கள், பற்பல ஆகமங்கள் முதலிய கலைகள் அனைத்தையும் தோற்றுவிக்கும் தன்மையைப் பெற்ற பிரணவத்தின் பொருளாக உள்ள பெரும் தலைவரே! அடியேனுடைய துன்பத்தைஎப்போது நீக்கியருள்வீர்கள்?

குறிப்புரை:- வேதம் முதலிய கலைகள் எல்லாம் பிரணவத்திலிருந்தே தோன்றின என்பது சாத்திரம். ''ஈசன் மேவரும் பீடமாய் ஏனையோர் தோற்றும் வாச மாய்எலா எழுத்திற்கும் மறைகட்கும் முதலாய்க் காசி தன்னிடை முடிப்பவர்க் கெம்பிரான் கழறும் மாசில் தாரகப் பிரமமாம் அதன்பயன் ஆய்ந்தான்'' என்பது கந்தபுராணம் (1-6-11). விநாயகர் ஓங்காரப் பொருளினர். ''தாரகப் பிரமம் ஆன மாக்கிய முகத்து வள்ளல்'' (கந்தபுராணம் 2.27-45). பாழி-முனிவர் இருப்பிடம் கீரநத்தம் மருதாசல சுவாமிகளின் இருப்பிடமாகப் பொலிகின்ற நிலையைச் சுட்டியவாறு, 5,13, ஆம் பாடல்களிலும் இக்கருத்து இடம்பெற்றுள்ளது. பாழி என்பதற்குப் பெரிய எனப் பொதுப்பொருள் கொள்ளுதல் இத்தலத்திற்குச் சிறப்பின்று.

3. இரவும்தண் பகலும் இடையினும் நின்தாள்
இடையறா தேத்திமெய் இன்பில்
விரவுமா தவம்சால் உத்தமர் நிலையில்
வினையனேன் என்றுற விடுப்பாய்?
கரவுதோய் உளத்தர் அணுகரும் காசிக்
கடிநகர் மாந்தர்உட் கனிவில்
பரவும்ஆட் டயர்வாய்! கீரநத் தப்பேர்ப்
பதிக்கண பதிப்பெரு மானே!

பொழிப்புரை:- வஞ்சக மனத்தரால் அடைய முடியாததாகிய காசி ஆம் பேரின்பம் வழங்கும் திருத்தலத்தில் உள்ள பக்தியுடன் போற்றுமாறு திருவிளையாடல் புரியும் துண்டி விநாயகரே! கீரநத்தக் கணபதியே! அல்லும் பகலும் அனவரதமும் தேவரீருடைய திருவடிகளை இடைவிடாமல் போற்றி நிலையான பேரின்பத்தை அடைகின்ற பெரிய தவத்தோடு கூடியவர்களாம் உத்தமர்களுடைய நிலைமையில் இருவினைகளில் சுழலும் அடியேன் இருக்குமாறு அருள்புரிவது எந்நாளோ? விரைவில் திருவருள் செய்யவேண்டும் என்பது கருத்து.

குறிப்புரை:- காசியில் எழுந்தருளியுள்ள விநாயகர் துண்டி விநாயகர் எனப்படுவார். இவரை வணங்கி கிப்பிரப்பிரசாதன் என்னும் மன்னன் பெரும் பேறடைந்த வரலாற்றை விநாயகபுராணம் கிப்பிரப்பிரசாதனன் வரம்பெறு படலத்தில் காண்க.

4. **வஞ்சக மாயைத் தொடக்குழந் தவமே**
**வாடும்என் மனதினில் மணப்பொற்**
**கஞ்சமா மலர்தாள் அமைக்கினே கருணைக்**
**கடற்பெயர் அடல்பெறும் கண்டாய்!**
**செஞ்சரித் தடம்கைச் சிற்றிடைக் காமர்ச்**
**சித்திபுத் திகள்எழில் திருக்கண்**
**பஞ்சரத் தகைகொள் கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே!**

பொழிப்புரை:- செம்மையான வளையல்களை அணிந்துள்ள பெருமைமிக்க திருக்கரங்களையும், குறுகிய இடுப்பினையும் பெற்றுள்ள அழகிய சித்தி புத்தி ஆகிய இரண்டு தேவிகளின் எழிலார்ந்த திருவிழிகளை (சகோரப் பறவைகளை) அடைத்து வைத்துள்ள கூண்டின் தன்மையைப் பெற்று விளங்கும் கீரநத்த விநாயகரே! ஏமாற்றும் இயல்பினைப் பெற்ற மாயையில் சிக்கித் தவித்து, வீணே மெலிகின்ற எளியேனின் உள்ளத்தில் தேவரீருடைய நறுமணமும் அழகும் பொருந்திய தாமரைபோற் சிறந்த திருவடிகளை நிலைநிறுத்தினால்தான் கருணைக்கடல் என்னும் தங்கள் புகழ் பொருள் செறிந்து வலிமை உடையதாகும்.

குறிப்புரை:- அருள்பெறத் தகுதியில்லாத அடியேனுக்கு அருள்புரிதல்தான் கருணைக்குப் பெருமை; தூய பக்குவான்மாக்களை ஆட்கொள்வதில் என்ன கருணை இருக்கிறது எனக் கேட்காமல் கேட்கிறார். சித்தி, புத்தி விநாயகரின் தேவியர்.

**தடங்கைச் சிற்றிடை -** முரண்தொடை. விநாயகரின் திருமேனியைக் கூண்டாக உருவகித்தவர் தேவியர்தம் கண்களைச் சகோரப் பறவைகளாகக் கூறாதது ஏகதேச உருவகம். விழிகளுக்குச் சகோரம் உவமை; ''மதித்த சகோரம் அலறப் பணி ரத்ன மணிக்குழையைச் சிலுகிட்டு மை இட்டு ஒளிவிட்டு மருட்தலுற்ற பொறிச்சியர் கண்'' (திருப்புகழ் 118) தேவியர்களின் பார்வை கணபதியின் திருமேனியின் மீதே லயித்திருந்தன ஆதலின் கூண்டு எனப்பட்டது.

5. **வாழ்வினில் களித்தும் தாழ்வினில் சலித்தும்**
**வானில்பா தலத்தில்இம் மண்ணில்**
**ஊழ்வினைச் சூறா வளியினால் துருப்பொத்து**
**உழலும்என் ஆவிதான் உன்பொன்**
**கேழ்விரி கமலத் தாளிடை புகுவான்**
**கிருபைசெய்; சரண்அறி கில்லேன்**
**பாழ்வினை தீர்ப்பாய்; கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே!**

பொழிப்புரை:- கீரநத்தம் விநாயகனே! வாழ்க்கையில் உயர்ச்சி ஏற்படும்பொழுது பேருவகை கொண்டும், தாழ்வு வரும்பொழுது மனச்சோர்வடைந்தும் இந்த நில உலகிலேயே முறையே சுவர்க்க போகம் போன்ற இன்பத்தையும், நரக வாதனை போன்ற துன்பத்தையும் அடைத்து, இருவினை ஆகிய புயலில் அகப்பட்டுத் துரும்பைப்போல உழன்று தவிக்கும் எளியேனுடைய ஆன்மா பொன்னொளி பரப்புகின்ற தேவரீரின் திருவடித் தாமரையில் பொருந்தும்படி திருவருள் புரிவீராக. உம்மைத் தவிர வேறு புகலிடத்தை அறியாதவனாகிய அடியேனை வீணாக்குகின்ற கருமமலத்தின் கட்டறுத்து ஆட்கொள்வீராக.

குறிப்புரை:- இம் மண்ணில் என்புழி இம் மண்ணிலேயே என விரித்துக் கொள்க. ஊழ்வினையின் பயனாகத் தோன்றும்

இன்ப துன்பங்களை மிகைப்படுத்திக் கொள்வது மனத்தின் செயல். உள்ளம் சமநிலைப் பெற்று விட்டால் கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார் ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார் (பெரிய- திருகூட்டச் -8) என்று சேக்கிழார் காட்டும் நிலை தோன்றிவிடும். இறந்த பிறகு நுண்ணுடல் சுவர்க்க நரகங்களில் உழல்வதற்கு உயிருடன் இருக்கும்போதே இன்பத்தில் செருக்கியும் துன்பத்தில் சோர்வுற்றும் உழலும் மன உளைச்சல் சற்றும் குறைந்ததல்ல என்று குறிப்பால் உணர்த்தினார். மண்ணில் என்புழி மண்ணிலேயே என விரிக்காமல் வானிலும் பாதலத்திலும் இம்மண்ணிலும் என எண்ணும்மையை விரித்தால் இச்சிறப்புப் பொருள் தோன்றாமை காண்க. சமநிலை பெற்ற உள்ளம் அமைந்த பிறகே இறைவன் திருவடியடைய முடியும் என்பது நூற்றுணிவு. வானில் பாதலத்தில் என்றும் ஈரிடங்களிலும் இல் உவம உருபு வாழ்வு, தாழ்வு வான் பாதலம். **வ-** நிரனிறை. **அறிகில்லேன்**-வினையாலணையும் பெயர்,ஆறன் உருபு விரிக்க **பாழ்வினை**-வீணாக்குகின்ற வினை எனப் பிறவினையில் வந்த வினைத்தொகை. பாழான வினை எனப் பெயரெச்சத்தொட ராக்கினும் அமையும்.

**6. கற்பகத் திருவேந் தளகையர் கோமான்**
**காத்தவாழ் வுன்பதம் கலந்த**
**புற்படு தரம்எய் திலஎனில் நின்தாள்**
**போற்றுவார்க் கிணைஎதைப் புகல்வேன்?**
**பொற்பரு வதத்தின் மீதமை பனிபோல்**
**பொற்புடன் நிறைவுறப் பொதிந்த**
**பற்பமெய்த் தவர்வாழ் கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே.**

*பொழிப்புரை:- பொன்மலையின் மீது பனி படர்ந்திருப்பதைப் போல அழகாகவும் உடல் முழுவதிலும் உத்தூளனமாகப் பூசிய திருநீற்றினையுடைய உண்மைத் தவசிகள் வசிக்கின்ற கீரநத்தம் என்னும் தலத்தின் விநாயகப் பெருமானே! கற்பகச் சோலையின் அரசனாகிய இந்திரனும் அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரனும் போற்றிப் பெற்றிருந்த பெரும் செல்வங்கள் அனைத்தும் தேவரீரின் திருவடியில் சமர்ப்பிக்கப் பெற்ற ஓர் அறுகம்புல்லின் தகுதிக்குச் சமம்*

ஆகவில்லை என்றால் தேவரீரின் திருவடிகளை வணங்குகின்ற அடியார்களுக்கு இணையாக வேறு எதைச் சொல்ல முடியும்? முடியாது என்பது கருத்து.

குறிப்புரை:- கவுண்டின்ய முனிவர் பெரிய விநாயகர் பக்தர். ஆசிரியை என்பவள் இவள் மனைவி. முனிவர் தம் மனைவிக்கு அறுகின் பெருமையை உணர்த்த விரும்பினார். கணபதியை அருசித்த நிர்மால்ய அறுகு ஒன்றை அவளிடம் கொடுத்து, ''இந்த அறுகின் நிறைக்குச் சமமான செல்வத்தை இந்திரனிடம் இருந்து பெற்று வா'' என அனுப்பினார். ஆசிரியையால் செய்தியை அறிந்த இந்திரன் ''இது குபேரனால் தான் முடியும்; அங்கே செல்க'' எனக் கூறித் தன் தூதர்களையும் உடன் அனுப்பினான். குபேரன் ஒற்றைஅறுகைக் கண்டு அலட்சியமாகச் சிரித்து தராசின் ஒரு தட்டில் அதனை வைத்தான். மறு தட்டில் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் செல்வம் அனைத்தையும் வைத்தும், தன் குடும்பத்தாருடன் தானும் மறுதட்டில் ஏறியும் தட்டுச் சரியாகவில்லை. அப்போது அங்கு வந்த இந்திரனும் மற்ற தேவர்கள் எல்லாரும் தராசில் ஏறியும் அறுகின் தட்டு உயரவில்லை. கணபதியை அருச்சித்த ஒற்றை அறுகம் புல்லுக்குத் தாம் இணை ஆகாதவர்கள் என அறிந்து நாணினர். ஆசிரியையும் அறுகின் பெருமையை உணர்ந்துகொண்டார். இந்த வரலாறு விநாயக புரணம் தூர்வை துலையேற்று படலத்தில் விரிவாக இடம்பெற்றுள்ளது. இதனை இந்த நூலாசிரியர் சுவாமிகளே தம் சித்தி விநாயக மாலையில், ''கவுண்டின்னியப்பேர் இசைதவன் மனைவி ஆசிரியை அருச்சனை அறுகொன்றுக்கு விண் அளகை அமைபொருள் மூவரும் நிகராத் திருச்சமை மகிமை பொருந்திடும் இட்ட சித்தி விநாயக மணியே'' (54) எனச் சுருக்கமாகக் கூறியுள்ளார்.

7. எவ்வனப் பருவத் துதித்துவார்த் திகத்தின்
இறந்தொழி தரும்மயல் இருளாம்
கொவ்வைவாய் மகளிர் ஆசையில் சாலக்
கொடியபொன் ஆசைதாக் குறஎன்
செவ்வகை இதயம் கலங்கிடா தருள்மெய்த்
தெரிசனம் ஈந்துசிற் சுகவான்
பவ்வமூ டமிழ்த்தாய் கீரநத் தப்பேர்ப்
பதிக்கண பதிப்பெரு மானே!

பொழிப்புரை:- கீரநத்த விநாயகரே! வாலிபத்தில் தோன்றி முதுமையில் அழிந்து தொலைகின்றதும் அறிவு மயக்கத்தை உண்டாக்குகின்றதும் ஆகிய இருட்டைப் போன்ற பெண்ணாசையை விட மிகவும் தீமை பயப்பதாகிய பொருளாசையின் தாக்கத்தால் அடியேனுடைய செம்மையான உள்ளம் கலக்கம் உறா வண்ணம் அருள்மெய்க்காட்சி வழங்கி, அறிவானந்த மயமாகிய பெரிய கடலூடு படியச் செய்வாய்.

குறிப்புரை:- **கொவ்வை வாய்** - கோவைப் பழத்தைப் போன்ற சிவந்த உதடுகள். சித்அறிவு. **சுகம்**-இன்பம். **வான் பவ்வம்**-பெரிய கடல். குறிப்பிட்ட பருவத்தில் தோன்றித் தானே மறைந்து விடும் காமத்தைவிட எந்தப் பருவத்திலும் குறையாமல் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே இருக்கும் பணத்தாசை மிகவும் கொடியது என விளக்குகிறார்.

8. **ஐந்தரு நிழற்கீழ் அமைதரும் புலவர்**
**அமிழ்தின்மிக் கினிமைசால் அதுலப்**
**பைந்தமிழ்க் கவிகொண் டுனைத்துதித் துருகும்**
**பணியில்யான் அமைந்திடப் பணிப்பாய்**
**உந்தலை வாரி மலைநிலம் சுமக்கும்**
**உரகம்ஓர் சுற்றாமை உதர**
**பந்தனத் தமைத்தாய்! கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே.**

பொழிப்புரை:- எழும்புகின்ற அலைகளையுடைய கடலையும் மலைகளையும் நிலத்தையும் தன்தலையில் தாங்குகின்ற பாம்பாகிய ஆதிசேடனைத் தம்முடைய வயிற்றைச் சுற்றி ஒரே ஒரு சுற்று வரும்படியான அரைப்பட்டியாக அமைத்துக் கொண்ட பெருமானே! கீரநத்த விநாயகரே! கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களை உடைய விண்ணுலகத்தில் வசிக்கின்ற தேவர்கள் உண்பதற்குரிய அமுதத்தை விட மிகுந்த சுவை பொருந்தியதும் இணையற்றதும் ஆகிய பசுமையான தமிழ்க் கவிதைகளால் தேவரீரைத் தோத்திரம் செய்து உள்ளம் உருகும் திருத்தொண்டில் அடியேன் பொருந்தியிருக்குமாறு திருவருள் புரிவீராக!

குறிப்புரை:- **உந்து அலை-** வினைத் தொகை. வாரி முதலிய மூன்றிடத்தும் எண்ணும்மை விரிக்க. உலகம் முழுவதையும்

தாங்கும் பாம்பு, வயிற்றின் ஒரு சுற்றுக்கே போதுமானதாக இருந்தது என்பதால் திருமேனியின் பேரளவு சுட்டப்படுகிறது. அகடு அசக்கு அரவு என்பார் கந்தபுராணம் உடையார் (பாயிரம்-1) பாடும் பணியே பணியாய் அருள்வாய் என்பது வேண்டுகோள்.

9. புண்ணியம் பாவம் தரும்சுக துக்கம்
 பொருள்படா வகைஅறப் போக்கும்
திண்ணிய தகைதோய் நின்பதத் தன்பென்
 சிந்தையில் என்றமைத் திடுவாய்?
கண்ணியத் தொண்டர் உன்அருள் வாசம்
 கமழ்ந்தெழும் கனிவுடைக் கவிதைப்
பண்ணியல் ஒலிஆர் கீரநத் தப்பேர்ப்
 பதிக்கண பதிப்பெரு மானே!

பொழிப்புரை:- மாண்பமைந்த அடியார்களின் உள்ளத்திலிருந்து திருவருளாகிய நறுமணம் வீசிக் கொண்டு பிறப்பதும் பக்திச் சுவையை உடையதும் ஆகிய கவிதைகளின் இசைப் பண்பமைந்த முழக்கம் பொருந்திய கீரநத்தத் தல விநாயகரே! நல்வினை தீவினைகளின் பயனாகிய இன்ப துன்பங்கள் (சற்றும் ஒருவரைப் பாதிக்காமல்) பயனற்றுப் போகும்படி முற்றிலும் அழிந்துவிடும் (சாந்தத்தை அருளும்) வலிமை வாய்ந்த தேவரீரின் திருவடிகளைப் போற்றும் பக்தியை அடியேனுடைய உள்ளத்தில் எப்போது உண்டாக்குவீர்கள்? விரைவில் தோற்றுவித் தருளவேண்டும் என்றபடி.

குறிப்புரை:- **புண்ணியம் பாவம்** - சுகம் துக்கம் நிரல்நிறை. பதத்துஅன்பு என். **தொண்டர் உள்**-ஆறன் தொகை. உள் எழும், கமழ்ந்து எழும் எனத் தனித்தனி இயையும்.

''வாழ்வினிற் களித்தும் தாழ்வினிற் சலித்தும்..... .....உழலும்என் ஆவிதான் உன்பொற் கேழ்விரி கமலத் தாளிடை புகுவான் கிருபைசெய்'' என்றார் இப்பதிகத்தின் 4ம் பாடலிலும்.

10. காவிரி விண்ணாட் டிறைவனம் செழிப்பக்
காவிரி நதிவரக் கணித்த
மாவிரி கருணை வாரிநின் சரண
வாரிசம் சரண்என வாய்ந்தேன்
பூவிரி மாயை வலையில்நெஞ் சுழன்று
புழுங்குதல் முறைகொலோ புகல்வாய்?
பாவிரி புகழ்தோய் கீரநத் தப்பேர்ப்
பதிக்கண பதிப்பெரு மானே!

பொழிப்புரை:- தோத்திரப் பாடல்களாகப் பெருகிய கீர்த்தி பொருந்திய கீரநத்த விநாயகரே! கற்பகச் சோலைகள் பெருகியுள்ள தேவலோகத்தின் அரசனாகிய இந்திரன் சீகாழிப் பதியில் அமைத்த பூங்காவனம் நன்கு செழிப்படைவதற்காகக் காவிரி ஆற்றை வரச்செய்தருளிய சிறப்பு மிக்க அருட்கடலாம் தேவரீரின் திருவடித் தாமரைகளே தஞ்சம் என்று துணிந்து அவற்றின்கண் பொருந்தியுள்ளவனாகிய அடியேன் உலகத்திலே நாளுக்கு நாள் பெருகுகின்றதாகிய மாயையாம் வலையில் சிக்கி, உள்ளம் தடுமாறி வருந்துதல் முறை ஆகுமோ? கூறியருள்க. முறையன்று அல்லவா என்பது கருத்து.

குறிப்புரை:- விரி விண்ணாட்டு, விரி மாயை, விரிபுகழ், மூன்றும் வினைத்தொகை. மாவிரி விரிமா என மறுக. முன் பின்னாகத் தொக்க வினைத்தொகை. இறைவனம், மாக்கருணை ஆறன் தொகைகள். **வாய்ந்தேன்-** வினையாலணையும் பெயர் பெருமானே! வாய்ந்தேன் புழுங்குதல் முறைகொலோ? புகல்வாய் எனப் பொருள் முடிபு காண்க. விநாயகர் காவிரி ஆற்றை வரவழைத்தது வெளிப்படை.

11. நினைத்திடில் காணில் கேட்கில்ஆ னந்தம்
நிறைக்கும்நின் பதத்தினை நினையேன்
வினைக்கொடும் சுரத்தில் புழுங்கும்என் றனக்கு
மெய்ப்புணர் வருளும்நாள் விளம்பாய்
கனைத்துவண் டருந்திக் களித்திடும் கடுக்கைக்
கண்ணிஆர் கரடவான் கடம்சால்
பனைக்கைமா முகனே! கீரநத் தப்பேர்ப்
பதிக்கண பதிப்பெரு மானே.

பொழிப்புரை:- வண்டுகள் ஒலித்துக் கொண்டு தேனைக் குடித்து மயங்குகின்ற கொன்றை மாலை பொருந்தியவரும் மதம் பாயும் சுவட்டினைப் பெற்ற பெரிய கவுனை உடையவரும், பனைமரம் போன்ற துதிக்கையைப் பெற்ற விலங்காகிய யானையின் முகத்தைப் பெற்றவரும் ஆகிய கீரநத்த விநாயகரே! சிந்தித்தாலும் தரிசித்தாலும் புகழைக் கேட்டாலும் உவகையைத் தரும் தேவரீரின் திருவடிகளைத் தியானிக்காமல் இருவினைகளின் கொடிய வெப்பத்தில் அவிகின்ற அடியேனுக்கு உண்மையான ஞானத்தை வழங்குவது என்று எனக் கூறுவீராக! வினாவில் வழங்கியருள வேண்டும் என்பது கருத்து.

குற்ப்புரை:- நினைத்திடில் முதலிய மூன்றில் எண்ணும்மை விரிக்க. **நினையேன்** - நினையாது என முற்றுவாய்ப்பாட்டில் வந்த வினையெச்சம். யானைத் துதிக்கைக்குப் பனைமரம் உவமை: பனைக்கை மும்மத வேழம் (தேவாரம் 2-1).

12. **நீங்குறாச் சுகம்தந் தாளநீ அடியேன்**
**நெஞ்சில்நின் றொளிர்திறம் நினையேன்**
**தீங்குதோய் உலகத் துக்கம்ஆர் பொருள்கள்**
**தேடிஇங் கவத்தினில் திரிந்தேன்**
**தேங்குமா தவர்கட் குரியநின் திருத்தாள்**
**சேர்ந்திடற் கென்செய்வேன்? சிரவைப்**
**பாங்குறு நலம்சால் கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே!**

பொழிப்புரை:- சிரவணபுரத்திற்கு அருகே இருப்பதாகிய பெருமை மிக்க கீரநத்தத்தின் கணபதியே! தேவரீர் எளியேனின் உள்ளத்தில் ஒளிவீசும் தன்மையைக் கருதாதவனாகியும், குற்றம் பொருந்திய உலகியலுக்கு வேண்டிய துன்பமளிக்கும் பொருள்களை நாடி அவற்றைப் பெறுவதற்காக உலகினில் வீணே திரிந்துகொண்டிருப்பவனாகவும் உள்ள அடியேனின் நிறைவினை உடைய சிறந்த தவத்தை உடையவர்களால் மட்டுமே அடையத்தக்கதாகிய தேவரீரின் திருவடிகளைப் பெருவதற்கு என்ன செய்வேன்? யான் ஒன்றும் செய்யவல்லேன் அல்லேன்; தேவரீரே அருள வேண்டும் என்பது கருத்து.

குறிப்புரை:- நினையேன், திரிந்தேன் இரண்டும் வினையாலணையும் பெயர். இரண்டிடங்களிலும்

எண்ணும்மை விரிக்க. மாதவர்கட்கு என்புழிபிரிநிலை ஏகாரம் விரிக்க என்புழிபு பிரிநிலை.

தவத்திரு.இராமானந்த சுவாமிகள் அவதரித்த தலமாகவும் அவரால் அருள்மிகு தண்டபாணி சுவாமி திருக்கோயிலும் சதுர்வேத சித்தாந்த சண்மத சமயாதீத கௌமார மடாலயமும் நிறுவப் பெற்ற பதியாகவும் இருப்பதால் சிரவை என்னும் சிரவணம்பட்டி பெருமைக்கு உரியாதகிறது. அத்தகைய சிறப்பு வாய்ந்த சிரவைக்குப் பக்கத்தில் இருப்பது கீரநத்தத்திற்குப் பெருமை ஆகும். கீரணத்து மருதாசல சுவாமிகள் அருளுபதேசம் பெற்றதும் சிரவையாதீனத்தில்தான் என்பதும் சித்திக்கத்தக்கது.

13. **இதம்கலந் தவர்பால் புரிஅறக் கருணைக்கு**
**ஏற்றவன் அல்லன்யான் எனினும்**
**மதம்கலந் திடுவல் அரக்கர்பால் புரிநின்**
**மறக்கரு ணைப்பெரு வழக்கைக்**
**கதம்கலந் திடுமா யாமலக் கருவி**
**கரணம்மேற் செலுத்திஎற் காத்துன்**
**பதம் கலந் திடச்செய்; கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானே.**

பொழிப்புரை:- கீரநத்த விநாயகரே! நன்மை பொருந்தியவர்களுக்குத் தேவரீர் புரியும் அறக்கருணையைப் பெற நான் தகுதியற்றவன் தான் என்றாலும், அகந்தை கொண்ட வலிமையான அரக்கர்களிடம் தேவரீர் மறக்கருணைக் காட்டுதல் ஆகிய வழக்கமானச் செயலைச் சினம் மிக்கதும் மாயாமலத்தின் தொடர்பு பெற்றதுமாகிய எளியேனின் புறக்கருவி (ஐம்புலன்) அகக்கருவிகளின் மீது (அந்தக்கரணம்) காட்டி, (அடியேனை அவற்றின் பிடியிலிருந்து) பாதுகாத்து, தேவரீரின் திருவடிகளிலே பொருந்துமாறு திருவருள் பாலிப்பீராக.

குறிப்புரை:- "என்னரே ஆயினும் யாவதொன்றெண்ணுதல் முன்னரே உனது தாள் முடியுறப் பணிவரேல் அன்னர்தம் சிந்தைபோல் ஆக்குதி அலதுனை உன்னலார் செய்கையை ஊறுசெய் திடுதிநீ'' (கந்தபுரணம்6-14-152) எனச் சிவபெருமான் விநாயகருக்கு அதிகாரம் அளித்தமையைக் கருதிக் கூறியது இது. அடியேன் அறக்கருணைக்குத் தக்கவன்

அல்லன். ஆனால் எளியேனைத் துன்புறுத்தும் மாயை மறக்கருணைக்கு உரியது. எனவே என் மலங்களை அழித்து விடுங்கள் எனச் சுவாமிகள் மிகச் சமத்காரமாக விண்ணப்பித்துக் கொள்கிறார்.

**நூற்பயன்**

**14. சத்திய ராமா னந்ததே சிகன்தாள்**
**சார்மரு தாசலத் தவன்மெய்ப்**
**பத்திசெய் கோயிற் கீரநத் தப்பேர்ப்**
**பதிக்கண பதிப்பெரு மானைக்**
**கைத்திறற் கவுமா ரத்தினர் அடிமைக்**
**கந்தசா மிச்சுதன் கனிவில்**
**துத்தியம் புரிபா ஏத்தெடுப் பவர்க்குச்**
**சொந்தம்உற் றிடும்பர சுகமே.**

பொழிப்புரை:- உண்மையான பொருளை உள்ளபடி உணர்ந்து சீடர்களுக்கு உபதேசிப்பவர்களாகிய தவத்திரு.இராமானந்த சுவாமிகளின் திருவடிகளைப் போற்றி, அடைந்து உயர்ந்தவராகிய தவத்திரு.மருதாசல சுவாமிகள் மெய்யன்போடு போற்றி வழிபட்ட ஆலயமாகிய கீரநத்ததில் எழுந்தருளியுள்ள விநாயகர் பெருமானை நல்லொழுக்கத்தின் வலிமையையுடைய கௌமார அடியார்களுக்கு அடியான் ஆகிய கந்தசாமி (சுவாமிகள்) ஆகிய மைந்தன் உள்ளன்பினால் துதிக்கின்ற இந்தப் பதிகத்தைப் போற்றிப் பரவுபவர்களுக்கு வீட்டின்பம் (உரியகாலத்தில்) கிடைக்கும்.

குறிப்புரை:- பா என்பது ஆகுபெயராகப் பாவான் இயன்ற பதிகத்தை உணர்த்துகிறது. பரசுகம் என்பதற்கு உலகியல் வாழ்விலேயே உயர்ந்த இன்பங்கள் என உரைப்பினும் அமையும் என்னை? "இம்மையேதரும் சோறும் கூறையும்; ஏத்தலாம்; இடர் கெடலும் ஆம்; அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு ஐயறவு இல்லையே" (தேவாரம் 7-34-1) என்பது தமிழ்மறை ஆதலின்.

# 2.கீரநத்தம் விநாயகர் பதிகம்.

காப்பு
(வெண்பா)

15. கீரநத்தப் பேரூர் கிளர்ந்துசித்தி முத்திஇன்பம்
சேரநத்தன் பாளர்உளச் சேமவைப்பாய்ச் - சோர்அநத்தம்
வீழ்த்தும் கருணை விநாயகப்பெம் மான்புகழ்ச்சீர்
வாழ்த்துக் கவன்அருள்கா வல்.

பொழிப்புரை:- கீரநத்தம் என்னும் தவச்சிறப்பால் பெரியதலத்தில் எழுந்தருளி விளங்குபவரும் அருட் சித்திகளையும் வீட்டுப் பேற்றையும் விழையும் அடியார்களின் உள்ளத்தில் நிலைத்துள்ள கருவூலத்தை நிகர்த்தவரும், மக்களுக்கு உள்ள சோர்வை உணடாக்குகின்ற அழிவுகளை ஒழிக்கின்ற கருணைமிக்கவரும் ஆகிய விநாயகப் பெருமானின் கீர்த்தியைச் சிறப்பித்து வாழ்த்துகின்ற இந்தப் பதிகத்திற்கு அப்பெம்மானுடைய திருவருளே காப்பாகும்.

குறிப்புரை:- பேர் ஊர் எனப்பிரித்துழிப்பெயரை உடைய ஊர் எனினும் அமையும். சேர நத்து அன்பாளர் தன்பாற் பொருந்த விழையும் பக்தர்கள். சோர் அநத்தம் என்புழிச் சோர்தற்சொல் சோர்வடையச் செய்யும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது. ''ஒருவன் இலட்சாதிபதியாவதன் முன் கோடீசுவரன் ஆகான் என்பதுபோல எப்படிப்பட்ட தவசியும் சித்தன் ஆவதன் முன் முத்தன் ஆவதில்லை'' (சத்தியவாசகம் 41) என்றும் வண்ணச்சரபரின் கருத்துக்கேற்பச் சித்தி முத்திகளைச் சேர்த்து அன்பர்கள் வேண்டுவதாகக் கூறுகிறார்.

நூல்
எழுச்சீர் விருத்தம்

16. வளம்பொலி கருணை ஞானம்வி நோத
மதம்பொழி மேனியும், மணப்பூந்
தளம்பொலி பதமும், துதிக்கைமா முகமும்,
சதுர்ப்புயங் களும்அக லாதென்

உளம்பொலி காட்சி அளித்தருள் மாட்சி
உதவிஆண் டருள்;மறை இனங்கள்
விளம்பொலி இன்பக் கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

*பொழிப்புரை:-* பற்பல வேதங்களை ஓதுகின்ற ஓசை கேட்பவர்களைப் பரவசப்படுத்தும் கிரநத்தம் என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டு விளங்கும் விநாயகப் பெம்மானே! அடியார்களின் இடர் களையும் அருள்வள்ளலே! மிகுதியான தயை,மெய்யறிவு, ஆனந்தம் ஆகிய மூன்று மதங்கள் பொழிகின்ற தங்கள் திருமேனியும், நறுமணம் பொருந்திய மலரிதழ் போன்ற திருவடிகளும், துதிக்கையை உடைய விலங்காகிய யானையின் முகமும், நான்கு தோள்களும் எப்போதும் நீங்காமல் அடியேனின் உள்ளத்தில் தரிசனம் தந்துகொண்டே இருத்தலாகிய சிறப்பை வழங்கி, அடியேனை ஆட்கொண்டு அருள்பாலிக்க வேண்டும்.

*குறிப்புரை:-* துதிக்கைமா முகம் என்னும் தொடருக்குத் தும்பிக்கையை உடைய பெரிய முகம் என்றோ, துதிக்கையால் பெருமை பெற்ற முகம் என்றோ உரைப்பினும் அமையும். அளித்தருள் மாட்சி என்புழி அருள் முதனிலைத் தொழிற்பெயர்; வினைத்தொகை எனினும் ஆம் வடமொழியில் "அனந்தா வை வேதாஹ" என்பதனைக் கருதி மறை இனங்கள் என்றார்.

17. "பிள்ளையார்?" எனில்நீ அன்றுநா னே;நீ
பெரியப்பன் ஆகும்;அம் மட்டோ?
தள்ளை, பிதாசற் குருதெய்வம் என்னும்
சகலமும் என்றுனை அடைந்தேன்;
கொள்ளையாம் சௌபாக் கியநலம் அனைத்தும்
கொடுத்தெனை ஆண்டிட வேண்டும்
வெள்ளைவான் மாடக் கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

*பொழிப்புரை:-* வெண்மைச் சுண்ணம் பூசப்பெற்றனவும் வானளாவியனவும் ஆகிய மாடிவீடுகள் நிறைந்துள்ள கீரநத்தத்தே எழுந்தருளியுள்ள விநாயகப் பெம்மானே! பிள்ளை எனத்தக்கவர் யார் என வினவில் நீர் அன்று; அடியேனே அத்தகையவன். நீர் பெரிய

தகப்பனார் ஆவீர்கள். அவ்வளவு தானா? தாய், தந்தை, நல்லாசான், கடவுள் எனப்படும் அனைத்தும் தேவரீரே என்று நம்பி உறுதியுடன் உம்பால் வந்து சேர்ந்துள்ளேன். மிக அதிகமான மங்களச் செல்வ நலங்கள் எல்லாவற்றையும் வழங்கி அடியேனை ஆட்கொண்டு அருள்புரிய வேண்டும்.

குறிப்புரை:- சிவபெருமானின் மூத்த புதல்வர் ஆதலால் விநாயகர் பிள்ளை எனக் கூறப்பெற்று, மரியாதை விகுதியாக ஆர் சேர்த்துப் பிள்ளையார் என வழங்கப்படுகிறார். இச்சொற்றொடர் பிள்ளை யார் எனப்பிரித்து புதல்வர் எவர் எனவும் பொருள்தருதலின் சுவாமிகள் நீர் உண்மையில் பிள்ளை அல்லார்; அடியேனே உம் தம்பியின் மகன் என்கிறார். முருகனடியார்களுக்கு அவரே தந்தை. அவருடைய தமையராகிய கணபதி பெரியப்பா ஆகிறார். வண்ணச்சரபரின் பின்வரும் பாடல் இவண் கருதத் தக்கது.

''என்பெரிய தாதைஅலை யோஎன இரந்தேன்;
அன்போடவன் ஆம்என அடுக்குமொழி ஒதி
வன்புழை நெடுங்கைநுனி வாய்த்ததிரு நீறு
என்புருவ நெற்றியில் அளித்தனன் எடுத்தே''

(குருபரத்துவம்-கணபதி தரிசனச் சுருக்கம் 20) சௌபாக்கியம் என்பது நல்ல வழியில் வந்து உயர்ந்த பயன்களைத் தரவேண்டும் என வலியுறுத்த சௌபாக்கிய நலம் என மிகுத்துக் கூறினார்.

18. **அலைஎன என்னைப் புலவழி இழுக்கும்**
**அகங்கர மனத்தைஓர் கணத்தில்**
**நிலைஎனப் புரிய வல்லதாய், பரிதி**
**நீள்வயிற் றமைத்தபொன் மேரு**
**மலைஎன ஒளிபெற் றமைதிரு மேனி**
**மயம்கொடுத் தென்னைஅங் கதற்காம்**
**விலைஎனக் கொள்வாய்; கீரநத் தம்தோய்**
**விநாயக விக்கினேச் சுரனே.**

பொழிப்புரை:- கீரநத்தப்பதிக் கணபதியே! (உள்ளத்தமைதி பெற்று ஒடுங்கியிருக்க விடாமல்) கடலலைகளைப் போல ஐம்புல இன்பங்களைத் தேடி அலக்கழிக்கும் இயல்புடையதும் அகந்தை மிக்கதுமாகிய எளியேனின் மனத்தை ஒருநொடிப் பொழுதில்

ஒருமுகப்படுத்தத் தக்க ஆற்றல் வாய்ந்ததும், சூரியனைத் தனது வயிற்றுப் பகுதியில் பொருத்திக் கொண்டுள்ள பொன்மலையாகிய மேருகிரியை போன்று பிரகாசிப்பதும் ஆகிய தேவரீரின் திருமேனியின் இயல்பில் ஒன்றச்செய்து, அதற்குக் கைம்மாறாக என் ஆன்மாவை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

குறிப்புரை:- வல்லதாய் ஒளிபெற்று அமை திருமேனி என இயையும். ஆய்,பெற்று என்னும் இரண்டு வினையெச்சங்களும் அமை என்னும் பெயரச்சத்தைக் கொண்டு முடிந்தன. பரிதி வயிற்று அமைத்த மேருமலை -ஒப்பு: ''தாமரை நாயகன் அகடு அசக்கு அரவின் மனியா உறை விகட சக்கரன்'' (கந்த புராணம் - பாயிரம் 1). திருமேனி மயம்-உருவத் தியானத்தில் வழிபடு கடவுளின் திருவுருவத்தில் தன்னை முற்றிலும் இழந்து லயித்து விடுதல். அடியேனின் சீவபோதத்தை ஏற்றுக்கொண்டு சிவபோதத்தை வழங்கியருள வேண்டும் என்றவாறு. ஒப்பு:- ''தந்தது உன்றன்னை; கொண்டது என்றன்னை'' (திருவாசகம் 397),கொண்டனை என்னை; உன்னைக் கொடுத்தனை (கலைசைப் பதிற்று.55) ''என்னை முழுக்க இழந்த இடத்தே தன்னை விளக்கிய சால்இள சைக்கோன்'' (இளசைப்பதிற்றுப் 47)

19. **ஒருவிசை அப்பன் றனைவலம் புரிந்திவ்**
**உலகெலாம் சுற்றிஓர் கணத்தில்**
**வருவிசைத் தம்பி பெறுமுன்மாம் பழத்தை**
**வாங்கினை; அநுதினம் பஞ்ச**
**தருவிசை கரத்தோய்ப் புரிவலத் தேற்குத்**
**தந்ததென் னே?புலப் பகைவர்**
**வெருவிசை அருள்வாய்; கீரநத் தம்தோய்**
**விநாயக விக்கினேச் சுரனே!**

பொழிப்புரை:- கீரநத்தத் தல விநாயகப் பெம்மானே! ஒரே ஒரு முறை சிவபெருமானை வலம் வந்த தேவரீர், இந்த உலகத்தை எல்லாம் ஒரு நொடியில் வலமாகச் சுற்றி வந்த வேகத்தை உடைய தம்பியாகிய முருகப்பெருமானுக்கு முன்பே, நாரதர் கொடுத்த மாம்பழத்தை இறைவன்பால் பெற்றுக் கொண்டீர். கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களை நிகர்த்த ஐந்து திருக்கரங்களைப் பெற்றுள்ள தேவரீரை

நாள்தோறும் வலம்வரும் எளியேனுக்கு எதை வழங்கியுள்ளீர்கள்? ஐம்புலன்களாகிய பகைவர்கள் அடியேனைக் கண்டு அஞ்சுதலாகிய பெருமையை வழங்கியருள்வீராக.

குறிப்புரை:- முருகப்பெருமானுக்கு முன்பே தம் பெற்றோர்களை வலம் வந்து விநாயகர் மாம்பழத்தைப் பெற்றுக் கொண்ட பழனி தல வரலாறு வெளிப்படை. **விசை**-முதலடியில் முறை (ஒருமுறை); **வெருவு இசை**-அஞ்சுதலாகிய பெருமை. **கரந்தோய்**-திருக்கைகளை உடைய தேவரீர், குறிப்பு வினையாலணையும் பெயர், இரண்டன் உருபு தொக்கது. **புரிவலத்தேற்கு**- செய்கின்ற வலம்புரிதலை உடைய அடியேனுக்கு வலத்தேன். குறிப்பு வினையாலணையும் பெயர். **புரிவலத்தேன்** - வினைத்தொகை.

20. **தந்தைதாய் தாரம் மக்களாம் பாசச்**
**சழக்கிடை துளக்குறா திருதாள்**
**சிந்தைசெய் தவமாண் பளித்தும்முன் யான்செய்**
**தீவினை யோ?நின்சோ தனையோ?**
**நிந்தைதோய் பாவர் புரியும்வல் வழக்கால்**
**நெட்டுயிர்த் தேங்கவைத் தது; நீ**
**விந்தையொத் தமையேல்; கீரநத் தம்தோய்**
**விநாயக விக்கினேச் சுரனே!**

பொழிப்புரை:- கீரநத்தப் பிள்ளையாரே! அடியேன் அப்பா, அம்மா, மனைவி, குழந்தைகள் என்னும் பாசத்தளையில் சிக்கி வருந்தாதபடி, தேவரீரின் இரண்டு திருவடிகளையும் தியானித்து வாழ்கின்ற தவச்சிறப்பை (துறவுநிலையை) வழங்கியருளிய பிறகும், இகழ்ச்சி நிறைந்த தீயசெயல்களைச் செய்யும் பாவிகளின் கொடுமையால் பெருமூச்செறிந்து வாடச் செய்தது என் பழைய தீவினையோ அல்லது தேவரீரின் சோதனையோ? எதுவாக இருப்பினும் ஏக்கத்தை நீக்கி ஆட்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

குறிப்புரை:- அளித்தும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. ஏங்கவைத்தது தீவினையோ சோதனையோ என இணையும்.

21. பதிஎலாம் தழைத்த தொண்டர்கள் இயற்றும்
பணிஎலாம் கொண்டருள் உன்சந்-
நிதிஎலாம் புகுந்து புகுந்துநின் அருள்மெய்
நிலைவிழி நேர்தரி சித்தென்
மதிஎலாம் கலந்தள் ளூறும்ஆ னந்த
மயம்பெறக் கடைக்கணித் தயன்கை
விதிஎலாம் அழிப்பாய்; கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

பொழிப்புரை:- கீரநத்த விநாயகப் பெம்மானே! ஊர்கள்தோறும் அன்பினால் சிறந்த அடியார்கள் புரியும் எல்லா வழிபாடுகளையும் ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு அருள்பாலிக்கும் தேவரீருடைய திருக்கோயில்கள் அனைத்திலும் நுழைந்து நுழைந்து, தெய்வீகமான உம் திருமேனியைக் கண்ணாரக் கண்டு, அடியேனுடைய அறிவில் முற்றிலுமாக நிறைந்து, மிகுதியான பேரின்பத்தில் இலயிக்க கடைக்கண் பார்த்தருளி, எளியேனின் தலையில் பிரமனால் எழுதப்பட்ட ஊழ்வினைகள் எல்லாவற்றையும் தீர்த்தருள வேண்டும்.

குறிப்புரை:- இப்பாடலில் எலாம் என்னும் சொல் முற்றிலும் என்னும் ஒரே பொருளில் ஐந்து முறை பயின்று வந்தது சொல் பொருள் பின்வருநிலை அணி எனப்படும்.

22. பக்கமேற் பக்க மாய்அகம் புறத்தும்
பதிசகு ணப்பிர மச்சீர்
அக்கமேல் அக்கம் கண்டருள் வழிபா
டாற்றலர் அநித்திய வாழ்க்கைத்
துக்கமேல் துக்கம் கொள்வதல் லால்மெய்ச்
சுகம்இக பரத்துறல் உளதோ?
மிக்கமேம் பாடார் கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

பொழிப்புரை:- மிகுந்த சிறப்புப் பொருந்திய கீரநத்தத்தில் எழுந்தருளியுள்ள விநாயகப் பெருமானே! அருகருகாக உள்ளத்திற்குள்ளும் வெளியிலும் ஆழமாகப் பதியும் தன்மையுள்ள திருஉருவமும் ஆகும் பரம்பொருளின் அழகைக் கண்ணாரத் தரிசித்து வழிபடாதவர்கள் நிலையற்ற உலகியல் வாழ்வினால் தோன்றுகின்ற

அடுக்கடுக்கான துயரங்களைப் பெறுவார்களேயன்றி, இம்மை மறுமைகளில் உண்மையான இன்பத்தைப் பெறுவார்களோ? பெறமாட்டர்கள் என்பது கருத்து.

குறிப்புரை:- **சகுணப் பிரமம்-** பரம்பொருள் வடிவமோ பெயரோ இல்லாத நிலையில் நிர்க்குணப் பிரம்மம் எனப்படும்ம; அப்பரம்பொருளே தொண்டர்களுக்கு அருள்புரிய வேண்டி நாமரூபங் கொண்டு தோன்றும் போது சகுணப் பிரம்மம் எனப்படும். இதுவே வழிபாட்டிற்கு எளியதும், தவறாமல் பயனளிப்பதும் ஆகும். நூலாசிரிய சுவாமிகள் இத்திருப்பாட்டால் உருவ வழிபாட்டின் மேன்மையை விளக்குகிறார்.

''சித்திமுத்தி என்னும்இரு பேறும் பெற்றுத்
திரும்பாத வீட்டினில்போய்ச் சேரு வார்க்குப்
பத்திவைராக் கியம்,ஞானம் என்னும் மூன்றும்
பக்குவமே; அவர்நடக்கும் பாதை தன்னைச்
சத்தியமாய் யோசிக்கில் தியானம் ஒன்றே;
சகுணமே அதற்கிசைவுஆம்; சார்ந்து நின்றால்
புத்தியினுக் கடங்காநிர்க் குணமும் தோன்றும்;
பூர்வதவப் பயன்இல்லார் பொருந்தி டாரே''

என்பது *தியானாநுபூதி (1)*

பதி சகுணப்பிரமம் - வினைத்தொகை. வழிபாடு ஆற்றலர் வினையாலணையும் பெயர், இப்பாட்டின் எழுவாய்; ஆற்றலர் கொள்வதல்லால் உறல் உளதோ என்பது முடிபு. வினா எதிர்மறைப் பொருட்டு.

**23. பாடிஉன் பெருஞ்சீர் ஏத்தும்மெய்த் தொண்டர்**
**பால்அமைந் திட்டஇன் பத்தில்**
**கோடியில் ஒருபங் கேனும்வா னவரும்**
**கொண்டிடல் அரிதெனின் ஞானப்**
**பீடியல் உனதா ளாம்பெரு மக்கள்**
**பெருமையார் பேசிட வல்லார்?**
**வீடியல் அருள்வான் கீரநத் தம்தோய்**
**விநாயக விக்கினேச் சுரனே!**

பொழிப்புரை:- (தன்னைச் சரணாக அடைந்த அன்பர்கட்கு) முத்தி இன்பத்தை வழங்குவதற்காக கீரநத்தப் பதியில் திருக்கோயில் கொண்டு விளங்கும் விநாயகப் பெருமானே! தேவரீருடைய பெருமையைப் பாடிப்புகழ்கின்ற மெய்யன்பர்களிடம் பொருந்தியுள்ள மகிழ்ச்சியில் கோடியில் ஒரு பாகமாவது தேவர்களும் பெருதற்கரியது; இந்த நிலையில் மெய்ஞானத்தால் சிறப்புப் பெற்று விளங்கும் உம் அடியார்களின் பெருமையை எவரால் எடுத்துரைக்க இயலும்? யாராலும் முடியாது என்றபடி.

குறிப்புரை:- பெருச்சீர் பாடி ஏத்தும் என இயையும் வானவரும் என்புழி உயர்வு சிறப்பும்மை. தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே (தனிப்பாடல்) என்பது ஔவையார் வாக்கு இறைவன் திருவுருவம் தாங்கி ஆலயத்தில் எழுந்தருளியிருப்பது அடியார்களுக்கு அருள்புரிவதற்காகவே ஆகும். மாதவச் சிவஞான யோகிகள் "இனியவன் உலகிற்கு எல்லாம் எம்மனோர் பிறவித்துன்பத் துனிதவிர்த்து அருளவேண்டித் தோள்ஒரு நான்கும் செவ்வாய்க் கனிமொழி இடமும் காள கண்டமும் கண்கள் மூன்றும் குனிமதிக்கீற்றும் காட்டி குளந்தையில் குடிகொண் டானே" (குளத்தூர்ப் பதிற்றுப் 41) என்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

24. பச்சிலை அறுகு மலர்புனல் எங்கும்
பரந்துற, பூசைஏற் றருள
மெய்ச்சிலை உருவாய் ஊர்தொறும் நீதான்
விளங்கணிக் கோயில்கொண் டுறவும்;
துச்சிலைப் பேணி, உண்டுடுத் துறங்கும்
துன்மதி யோர்கொள்வார் நரகாம்
மிச்சிலை என்னே! கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

பொழிப்புரை:- கீரநத்தக் கணபதியே! எல்லா இடத்திலும் பூசனைக்குரிய பசியப் பத்திரங்களும், அறுகம்புல்லும், மலர்களும், தண்ணீரும் நிறைந்திருக்கின்றன; அன்பர்களின் வழிபாட்டை ஏற்றுக்கொண்டு, திருவருள்புரிய தேவரீர் தலங்கள் தோறும் திருமேனி தாங்கி, திருக்கோயில் கொண்டு விளங்குகிறீர்கள். இவ்வாறு இருக்கவும் உம்மை வழிபடமால் உடலை மட்டுமே நன்கு

பாதுகாத்துக் கொண்டும், நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டும், உடைகளை அணிந்து கொண்டும் தூங்கிக்கொண்டும் நாட்களை வீணே கழிக்கின்ற அறிவற்றவர்கள் தாம் என துய்த்துக் கழித்த எச்சிலாகிய நரகம் போன்ற உலகியல் இன்பங்களையே மீண்டும் மீண்டும் விரும்பி ஏற்கின்றனர். இந்த அறியாமை தான் என்னே?

குறிப்புரை:- உண்டு, உடுத்து, உறங்கும் மிச்சிலாம் நரகைத் துன்மதியோர் கொள்வார் எனக் கொண்டு கூட்டிக்கொள்க.

"புண்ணியம் செய்வார்க்குப் பூஉண்டு; நீர்உண்டு;
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்;
எண்ணிலி பாவிகள் எம்இறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே!" (1828)

என்னும் திருமந்திரத்தை அடியொற்றியது இப்பாடல். இவரே மற்றோரிடத்தில் இப்பாவின் பிற்பகுதிக் கருத்தை இவ்வாறு தன்மேல் ஏற்றிக் கூறுகிறார். "பண்டுஉண்ட ஒன்றினை நாளும் புதிதுஎனப் பற்றுமிஞ்சி உண்டுஉண்டு அலைமனத் தேன்" (மருதமலை அலங்கரம் 48)

25. அங்குச பாசம் ஏந்தும்நின் திருக்கை
அதைத்தெரி சித்தவர் மாதர்
அங்குச பாசம் இசைந்துவீண் உலகத்து
அலைகுவ ரோ?மணி மன்றம்
தங்குச பேசன் அம்மைகண் டுவகை
தழைக்கும்ஆ னந்தவா ரிதியே!
வெங்குசன் புகழ்ச்சீர்க் கீரநத் தம்தோய்
விநாயக விக்கினேச் சுரனே!

பொழிப்புரை:- எல்லோராலும் அஞ்சப்படுகின்ற (தீமைதரும் கோள் ஆகிய) செவ்வாயால் போற்றப்பெறும் பெருமை பொருந்திய கீரநத்த விநாயகரே! இரத்தின சபையில் நிலைத்து வாழும் மன்றிற்குத் தலைவன் ஆகிய சிவபெருமானும் (அம்பாலவாணன்) உமாதேவியும் கண்ணாரப் பார்த்து பார்த்து மகிழும் இன்பக் கடலே! யானைத்தொட்டியையும் பாசக்கயிற்றையும் ஏந்தியுள்ள தேவரீரின் திருக்கரங்களைக் கண்ட பெரியோர்கள் மகளிரின் அழகிய நகில்களாகிய பிணிப்பில் சிக்குண்டு பயனற்ற உலகியல் வாழ்வில்

*அலை மோதுவார்களோ? மாட்டார்கள் என்பது கருத்து.*

குறிப்புரை:- அங்குச பாசம்-உம்மைத்தோகை; திருக்கை அதை என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. அம்குசம்-அழகிய நகில். மணிமன்றம் என்பதற்கு திருவாலங்காடு ஆகிய இரத்தின சபை என்றோ பொதுவாக அழகிய சபை என்றோ கொள்ளலாம். சபேசன் அம்மை-உம்மைத்தொகை.

செவ்வாய் விநாயகரை வழிபட்ட வரலாறு:- நர்மதையாற்றில் நீராடிக் கொண்டிருந்த பாரத்துவாஜ முனிவர் அங்கு வந்த ஒரு தேவமங்கையைக் கண்டு கண நேரம் காமவயப்பட்டார். அந்தக் கணத்தில் ஒரு குழந்தை உருவாகி நிலமகளால் வளர்க்கப்பட்டது. அது மிகச் சிவந்த நிறத்தில் இருந்ததால் செவ்வாய், அங்காரகன் எனப் பெயரிடப் பெற்றது. குஜன் என்னும் சொல்லிற்குப் பூமியில் பிறந்தவன் என்றுப் பொருள். வளர்ந்த குஜன் பரத்துவாசரின் அறிவுரைப்படி, ஆனை முகப் பெருமானை வேண்டித் தவம் செய்து தான் ஒன்பான் கோள்களில் ஒன்றாகும் சிறப்பையும், செவ்வாய்க்கிழமையும் சதுர்த்தியும் இணைந்த நாட்களில் விநாயகரை வழிபடுவோர்க்கு எல்லா நலன்களும் எய்தவும் வரம்பெற்றான். அங்காரகன் அவந்தி மாநகரத்துக்கு அருகே காமதம் என்னும் ஊரில் பிள்ளையார் கோயில் கட்டி வழிபட்டான்.

**நூற்பயன்**

26. **தேவியல் நலம்தோய் இரத்தினா சலத்தின்**
**சிறந்தஉத் தரத்தினில் அணித்தாய்**
**மேவிய இன்பக் கீரநத் தம்தோய்**
**விநாயக விக்கினேச் சுரனைக்**
**காவியற் சிரவை பெற்றகௌ மாரன்**
**கந்தசா மிச்சுதன் போற்றும்**
**பாவியற் பதிகம் நாவிசை வல்லார்**
**பரசுகப் பேறுடை யாரே.**

*பொழிப்புரை:- தெய்வீகச் சிறப்பு வாய்ந்த இரத்தினாசலம் (சிரவணம்பட்டிக் கரடு) என்னும் குமரவேள் உறையும்*

மலைத்தலத்திற்கு வடத்திசையில்,அருகில் உள்ளதும், அன்பர்களுக்கு உவகையைத் தருவதும் ஆகிய கீரநத்தப் பதியில் எழுந்தருளியுள்ள விநாயகக் கடவுளை மலர்சோலைகளால் பெருமை பெற்று விளங்கும் சிரவணபுரியில் தோன்றியவரும், கௌமார நெறியில் ஒழுகுபவரும் ஆகிய கந்தசாமி (சுவாமிகள்) என்னும் மைந்தன் துதிகின்ற இந்தச் செய்யுட்களாலாகிய பதிகத்தைப் பக்தியோடு பாராயனம் செய்பவர்கள். மேலான இன்பப்பயனை அடைவார்கள்.

குறிப்புரை:- **தேவு+இயல்-தேவியல்=தெய்வீகம். சிரவை என்பதனை இடஆகுபெயராகச் சிரவையாதீனம் என உரைப்பினும் அமையும். பா இயல் பதிகம் . பாவான் இயன்ற பதிகம், இயல் பதிகம்-வினைத்தொகை, எதுகை நோக்கிய வலித்தல் விகாரம். ஈற்றேகாரம் அசைநிலை.**



# 3.கீரநத்தம் விக்கின விநாயகர் பதிகம்

காப்பு

(வெண்பா)

27. **கீரநத்தக் கோயில் கிளர்விக்கி னேச்சுரன்மேல்**
**சாரம்மலி செந்தமிழ்ப்பாச் சாத்துதற்கு - வாரம்மிகும்**
**மையநிலை யோர்கொள்இரா மானந்த சற்குரவன்**
**துய்யஇனணப் பாதம் துணை.**

*பொழிப்புரை:- கீரநத்தப் பதியில் திருக்கோயில் கொண்டு விளங்கும் விநாயகப் பெருமானைப் போற்றி இனிமைமிக்க செம்மையான தமிழ்ப்பதிகத்தை இயற்றி அணிவிப்பதற்கு அன்பு நிறைந்த சமய சமரசத்தினர் ஏற்றுப் போற்றுகின்ற தவத்திரு. இராமானந்த சுவாமிகள் என்னும் நல்ல குருநாதருடைய தூய்மைமிக்க இரண்டு திருவடிகளும் காப்பாகும்.*

**குறிப்புரை:- மையநிலை என்றது எல்லாச் சமயங்களையும் ஒரே பரம்பொருளை அடையும் பல்வேறு நெறிகளாகக் கருதி ஒழுகும் சமரசத்தோரை.**

நூல்

எண்சீர் விருத்தம்

28. **கீற்றிசையும் மதிஇதழிச் சடையும், காமர்க்**
**கிரணம்நில விடும்பவளக் கிரிநேர் மெய்யும்,**
**காற்றிசையும் செவித்துணையும், தருநேர் ஐந்து**
**கரமலரும், பொழிகருணைக் கண்கள் மூன்றும்,**
**மாற்றிசைசெம் பொன்அடித்தா மரையும் தோன்ற**
**வந்தடியேற் கிட்டசித்தி வழங்கி, விண்அப்**
**பாற்றிசைமுற் றிசைநலம்சேர்; கீர நத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே.**

*பொழிப்புரை:- கீரநத்தக் கணபதியே! பிறைச்சந்திரனும் கொன்றைப் பூவும் இடம் பெற்றுள்ள சடையும், அழகிய கதிர்களைப் பரப்புகின்ற பவளமலைப் போன்ற திருமேனியும், தாம் அசைவதால் காற்றை வீசுகின்ற இரண்டு காதுகளும், வானுலகத்தில் உள்ள ஐந்து தெய்வீக*

மரங்களை நிகர்த்த ஐந்து கைகளும், அருள் பொழிகின்ற மூன்று திருவிழிகளும், மாற்றுயர்ந்த சொக்கத்தங்கம் போன்ற திருவடிக் கமலங்களும், அடியேனின் கண் எதிரே காட்சியாகுமாறு எழுந்தருளி எளியேனின் விருப்பங்களை நிறைவேற்றி, வானுலகிலும் அதற்கு அப்புறத்தும் புகழ் நிலைபெறும்படி அருள்வீராக.

குறிப்புரை:- **மதி இதழி** - உம்மைத் தொகை. விநாயகருக்கும் சிவப்பெருமானைப் போலவே சடாமுடி, மூன்று கண்கள், சிவந்த திருமேனி ஆகியன உண்டு.

**29. எண்ணிலவாம் அண்டவகை அனைத்தும் தோற்றி**
**இரட்சித்துச் சங்கரிக்கும் இறைவர் கட்கும்**
**கண்ணிலவு பேரருட்சீர் புரிஅ நாதிக்**
**கடவுளே! மின்னில்ஒரு கணத்தில் மாயும்**
**புண்ணிலவும் உடம்பினைமெய்ப் பொருளாப் போற்றும்**
**புந்தியிலேற் இன்பநலம் பொருத்தி ஆள்வாய்;**
**பண்ணிலவு துதிமணம்சால் கீர நத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே!**

பொழிப்புரை:- இசையோடு கூடிய தோத்திரங்களின் இனிமை நிறைந்த கீரநத்தப் பதி விநாயகப் பெருமானே! கணக்கற்ற உலகங்களை எல்லாம் படைத்துக் காத்து அழிக்கின்ற மும்மூர்த்திகளாகிய பிரமன், திருமால், உருட்திரர்க்கும் அருட்பாவை வழங்கியருளும் ஆதியும் அந்தமும் அற்ற பரம்பொருளே! மிகச் சிறிய கால இடைவெளியிலேயே ஒரு மின்னலைப் போலத் தோன்றி அழியும் இயல்புள்ளதும், பல நோய்களுக்கு இடமாக உள்ளதும் ஆகிய உடலை நிலையான ஒன்றென மயங்கிப் பேணிவரும் அறிவிலியாம் அடியேனுக்கு பேரின்பத்தை வழங்கி ஆட்கொண்டருள்வீராக.

குறிப்புரை:- அநாதி என்றதனால் அந்தத்தையும் உரையில் உபலட்சணமாகச் சேர்த்துக் கொள்ளப் பெற்றது. மின்னில் என்புழி இல் உவமஉருபு. **புண்நிலவும்**-நோய்கள் நிரம்பிய என்பதன்றி ஊனலாகிய எனினும் ஆம்.

30. பிரணவத்தின் உட்பொருளாய் விளங்குன் மேன்மை
பெருக்கம்உணர்ந் தன்பின்மிகப் பேணும் தொண்டர்
மரணம்உதிப் பென்றஇருள் மாயம் மாற்றி,
வரம்பில்பரி பூரணமெய் வாழ்வில் வைக்கும்
சரணமலர் என்முடியில் சூட்டி, இன்ப
சாகரத்தின் மூழ்கவைப்பாய்; சரணம் ஆனேன்;
பரணமிசை நீற்றணியார் கீர நத்தப்
பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே.

*பொழிப்புரை:- தன்னை அணித்தவர்களைப் பாதுகாக்கின்ற (தாங்குகின்ற) திருநீற்றுப் பொலிவு மிக்க கீரநத்த விநாயகரே! ஓங்காரத்தின் மெய்ப் பொருளாகப் பிரகாசிக்கின்ற தேவரீரின் சிறப்பின் மிகுதியை உணர்ந்துகொண்டு, பக்தியால் மிகுதியாகப் போற்றுகின்ற அடியார்களின் இறப்பு,பிறப்பு என்னும் அறியாமையின் விளைவாகிய மயக்கத்தை ஒழித்தருளி, எல்லையற்றதும் முழுமையானதும், நித்தியமானதும் ஆகிய முத்திலையில் பேரின்பம் நுகரவைக்கும் திருவடித் தாமரைகளை அடியேனின் தலையிலும் சூட்டி, எளியேனையும் பேரின்பக் கடலுள் திளைக்க வைக்க வேண்டும். அடியேன் தேவரீரை அடைக்கலமாக அடைந்தேன். (ஆட்கொள்வீராக!)*

31. அண்டர்உளம் வெருவுதுயர் ஆற்றும் தீயன்
ஆனகன லாசுரன்றன் ஆகம் தன்னை
உணடருளும் கருணைநெடும் கடலே! முற்றும்
உற்றதுணை நீஎனஉள் உவந்து போற்றும்
தொண்டமைவேன் றனைப்புலவே டுவர்அ ரித்துத்
துய்க்கும்விந்தை காணஉளம் துணிந்த தென்னோ?
பண்டமலி வளமையணிக் கீர நத்தப்
பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே.

*பொழிப்புரை:- கால்நடைச் செல்வமிகுதியால் பெருமை பெற்றுள்ள கீரநத்தத்தின் பிள்ளையாரே! தேவர்களை நினைத்தாலே அஞ்சும்படி துன்புறுத்திய கொடியவன் ஆகிய அனலாசுரனை விழுங்கிவிட்ட தயாநிதியே! எளியேனுக்கான முழுமையான புகலிடம் தேவரீரே என மனதார நம்பித் துதிப்பதாகிய பணியில் ஈடுபட்டுள்ள அடியேனை ஐந்து புலன்களாகிய வேடர்கள் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதைத்து*

உண்டுவருகின்ற வியப்பைப் பார்த்தும் அருள்புரியாமல் சும்மா இருக்கத் தாங்கள் துணிந்தது ஏனோ? விரைவில் திருவருள் பாலிக்க வேண்டும் என்பது கருத்து.

குறிப்புரை : - அனலாசுரன் வரலாறு - திலோத்தமையின் நாட்டியத்தைப் பார்த்துக் காமவயப்பட்ட இயமனுக்கு அந்தக் கணத்திலேயே பிறந்தவன் அனலாசுரன். இவனைப் பார்த்துக் காலனை உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் அஞ்சினர். தேவர்களின் வேண்டுகோளின்படி விநாயகர் அனலாசுரனை எடுத்து விழுங்கி விட்டார். **புலவேடுவர்** - உருவகம், இது மரபாகப்பயன்படுத்தப்படும் ஒன்று. ''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென'' (சிவஞானபோதம் 8) என்னும் சாத்திரக் கருத்தை நினைவூட்ட இது பல முறை பயன்படுத்தப்படுகிறது.

இறைபணியில் ஈடுபட்டுள்ளவரையும் புலன்கள் துன்புறுத்துவதை ஆசிரியர் விந்தை என்கிறார்.

32. **பூவிரியும் கற்பகநாட் டிறைவன் முன்னம்**
**புகலியிற்செய் நந்தவனம் புலரா வண்ணம்**
**காவிரிமா நதிபுவியிற் பொலிய வைத்த**
**காரணனே! நியதிவெப்பம் கலந்து, வாடி,**
**நாவிரியத் துதித்திடுவிண் ணப்பம் கேட்டும்**
**நாயேனைப் புறக்கணித்தல் ஞாயம் தானோ?**
**பாவிரிமெய்ப் புலவர் தொழக் கீரநந்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே!**

பொழிப்புரை : - மிகுதியான செய்யுள்களை இயற்றவல்ல உண்மைக் கவிஞர்கள் வணங்குமாறு கீரநத்தத்தில் கோயில் கொண்ட கணபதியே! மலர்கள் நிறைந்த கற்பகசோலைக்கிடமாகிய சுவர்க்கத்தின் அரசனாம் இந்திரன் முற்காலத்தில் சீர்காழியில் உண்டாக்கிய பூங்கா நீரின்றி வாடிப் போகாதபடி காவிரியாற்றை நிலவுலகில் பாயவைத்த பரம்பொருளாம் விநாயகரே! ஊழ்வினையால் உண்டான சூடு பொருந்தியதால் வருந்தி, (அவ்வினை அகல வேண்டி) நாக்கை நன்றாக அசைத்துப் போற்றுகின்ற வேண்டுகோளை செவியேற்றும் இழிகுணம் மிக்க

எளியவனை ஆட்கொள்ளாமல் அருள்பார்வையிலிருந்து வெளியேற்றுதல் முறையாகுமோ? நியாயம் அன்று என்பது கருத்து.

கருத்துரை : - அகத்தியர் கமண்டல நீரை விநாயகர் காகத்தின் வடிவத்தில் வந்து கவிழ்த்துக் காவிரியாக்கிச் சீகாழியில் இந்திரன் அமைத்திருந்த பூங்காவைக் காத்த வரலாறு கந்தபுராணத்தில் விரிவாக உள்ளது.

இந்திரனின் சோலை கோடை வெப்பத்தால் வாடாமல் காத்த தேவரீர் எளியேன் ஊழ்வினையின் வெப்பத்தால் வாடாமல் காக்க வேண்டும் எனக் குறிப்பாகத் தெரிவிப்பதால் கருத்துடை அடை கொளி. நியதி வெப்பம் - மூன்றன் தொகை.

33. **கைமேலாம் உன்பூசா பலம்தான் என்றும்**
**கைமேலாம் என்ன,மனம் கனிந்து, செய்து,**
**மெய்மேலாம் அன்பர்எலாம் பெற்று வந்து**
**விளையாடல் புரிந்தகதை விதங்கள் எல்லாம்-**
**பொய்மேலாம் வினையேன் என் ஒருவன் மட்டில்-**
**பொலிந்துபலி யாதிருக்கும் புதுமை என்னே?**
**பைமேலாம் தகைமருவு கீரநத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே**

பொழிப்புரை : பசுமை ஆகிய உயர்ந்த நன்மை பொருந்தியுள்ள கீரநத்தத்தில் எழுந்தருளியுள்ள கணேசமூர்த்தியே! மேன்மைமிக்க ஒழுகலாறு ஆகிய தேவரீரின் வழிபாட்டுப்பயன் எந்நாளும் உடனே கைமேற்பலனாகக் கிடைக்கும் எனக் கருதி, பக்தியுடன் வழிபட்டு, உயர்ந்த மெய் அடியார்கள் அனைவரும் பலன் பெற்று, மகிழ்ந்து, அருளாடல் புரிந்த பலவகையான வரலாறுகள் எல்லாம், பொய்மையிற் சிறந்து விளங்குகின்ற தீவினையுடையேனாகிய அடியேன் ஒருவனைப் பொருத்தமட்டிலும் பலன் அளித்து விளக்கம் பெறாமல் இருக்கும் இந்த அற்புதம் எத்தன்மையானது? எளியேனுக்கும் வழிபாட்டுப் பயனை உடனே வழங்கியருள வேண்டும் என்பது கருத்து.

குறிப்புரை : **முதலடியில் முதல் கை** - ஒழுக்கம்; மற்றது கை மேல் பலன் என்னும் மரபு வழக்கில், கரம். மேலாம் மெய் அன்பர் என இயையும். பலித்துப் பொலியாதிருக்கும் எனப்

பிரித்துக் கூட்டுக. கனிந்து, செய்து, பெற்று, உவந்து என்னும் வினையெச்சங்கள் புரிந்த என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

34. **கண்டார்கள் உளம்நடுங்கும் விடம்சேர் பாம்பும்**
**கவின்றநின துரதமிசை கச்சை யாகக்**
**கொண்டாயே? மெல்அறுகம் புல்லும் இன்பம்**
**குலவடிமேற் கொண்டு வெப்பம் குளிர்ச்சி எய்த**
**உண்டாயே? அரியமனி தப்பி றப்பை**
**உடைய எனைக் கடையவன்என் றொதுக்கை நன்றோ?**
**பண்டாய மறைமுதல்வா!கீர நத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே.**

*பொழிப்புரை : மிகப்பழமையான வேதங்களால் போற்றப்படும் முதற்பொருளே! கீரநத்துப் பிள்ளையாரே! பார்த்தவர்களை அச்சம் கொள்ளச் செய்யும் நச்சுப்பாம்பை தேவரீரின் பெரிய வயிற்றின் மேல் கட்டப்பெறும் கச்சாக ஏற்றுக் கொண்டீரே? மென்மையான அறுகம்புல்லையும் அடியார்களுக்குப் பேரின்பத்தை வழங்கும் திருவடிகளின் மேல் ஏற்றுக் கொண்டு அனலாசுரனை விழுங்கியதால் ஏற்பட்ட சூட்டைத் தணித்துக் கொண்டீரே? பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றுள்ள அடியேனைஇழிகுணங்களை உடைய கீழோன் எனக் கருதி ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணித்தல் சரியாகுமோ?*

குறிப்புரை : விடங்கொண்ட பாம்பையும், மிக்ச சாதாரணமான புல்லையும் ஏற்றுக் கொண்ட தேவரீர் கிடைத்தற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றுள்ள அடியேனை ஏற்காமல் இருப்பது முறையன்று என்பது குறிப்பு. நாகத்திடம் நஞ்சும். அறுகின்பால் எளிமையும் இருப்பதைப்போல அடியேனிடம் இழிதகைமை உள்ளது. அவற்றை ஏற்றது போல என்னையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிறார்.

நினது உதரமிசை குலவு அடிமேல்

அனலாசுரனை விநாயகர் விழுங்கியதால் ஏற்பட்ட வெப்பம் நீங்க முனிவர்கள் அறுகு கொண்டு அருச்சித்த வரலாறு வெளிப்படை.

35. விதிக்இலக்காய் எண்பத்து நான்கு லக்க
மெய்எடுத்துப் பொய்எடுத்து விழிக்கும் என்புன்
மதிக்கிலக்காய் உனதுதிருச் சேவை காட்டி,
மறைமுதலாய் முடியாகி வயங்கும் உன்மெய்க்
கதிக்கிலக்காம் பதம்சூட்டிக் கருணை ஞானக்
கண்ணளித்து விண்ணளித்துக் காத்தாட் கொள்வாய்;
பதிக்கிலக்கா நலம்பொலியும் கீரநத்தப்
பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே!

பொழிப்புரை : ஓர் ஊர் எவ்வாறு இருக்க வேண்டுமோ அந்த இலக்கணத்தின்படி சிறப்புற்று விளங்கும் தலமாகிய கீரநத்தத்தின் கணபதியே! ஊழ்வினைக்காளாய் எண்பத்து நான்கு லட்சம் வகையான உடல்களைப் பெற்றுப் பிறந்து, மாயையை உண்மையாக நம்பி ஏற்றுத் திகைக்கின்ற அடியேனின் சிற்றறிவும் உணருமாறு தேவரீர் தரிசனம் அளித்து வேதங்களின் முதற்பொருளாகவும் முடிந்த பொருளாகவும் விளங்குகின்றதும் தன்பால் அடைந்தவருக்கு வீட்டின்பத்தைத் தருவனவும் ஆகிய திருவடிகளைத்தலையில் சூட்டி, அருள் மெய்யறிவு என்னும் இரண்டு விழிகளை வழங்கி, மறுமை நலத்தையும் காட்டி, எளியேனைப் பாதுகாத்து ஆட்கொண்டருள்புரிவீராக.

குறிப்புரை : பதிக்கு இலக்கா என்பதற்கு பரம்பொருளின் இலக்கணத்திற்கு அமைய எனப் பொருள் கொண்டு ''இச்சை உயிர்க்கு இரங்கல், ஞானம் இசைந்துணர்த்தல் வைக்க கிரியை வய நடத்தல்'' (துகளறு போதம் 41) என்பதற்கேற்ப அடியார்களுக்கு அருள்புரிய கீரநத்தத்தில் கோயில் கொண்டுள்ள விநாயகர் எனினும் அமையும்.

36. கவம்தழைக்கும் மரணமிசை துன்பம்முற்றும்
கடவுளே அறியும்எனும் காட்சிசான்ற
நவம் தழைக்கும் பெரியோர்மெய் மாற்றம்கேட்டு
நடுங்கிஉனக் கடைக்கலம்ஆம் நாயேன் அன்பில்
சிவம்தழைக்கும் வாழ்வில்அமைந் தருள வேண்டித்
தெண்டனிட்ட விண்ணப்பம் செவிசாய்த் தேற்பாய்;
பவம்தழைக்கும் துயர்அகற்றக் கீரநத்தப்
பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே!

பொழிப்புரை : மீண்டும் மீண்டும் பல்வேறு பிறவிகளில் பிறக்க வேண்டிய துன்பத்தை நீக்குவதற்காகக் கீரநத்தத்தில் எழுந்தருளியுள்ள விநாயகரே! சிலேத்துமம் (கபம்) மிகுதிப்படுவதாகிய இறக்கும் தருவாயில் ஏற்படுகின்ற வேதனை ஏத்தகையது என்பதை இறைவனே அறிவான் என, மெய்யறிவும் அருளும் மிக்க சான்றோர்களின் உண்மையான வார்த்தைகளைச் செவியேற்று, பேரச்சம் கொண்டு, தங்கள்பால் சரணடைந்துள்ள இழிதகைமை உடையேனாகிய அடியேனை அருளால் கடைக்கணிந்து பேரின்பம் நிறைந்த மேல்நிலையில் வைக்க வேண்டும் என இறைஞ்சி, பணிந்து வேண்டுகின்ற வேண்டுகோளைக் காதுகொடுத்துக் கேட்டுத் திருவருள் புரிவீராக.

குறிப்புரை : மரணவேதனையில் கோழை மிகும்; ''புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி அறிவு அழிந்திட்டு ஐம்மேல் உந்தி அலமந்தபோது'' (தேவாரம் 1-130-1) என்பது சம்பந்தர் வாக்கு. ''யான்ஏதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என் கடவேன்'' (திருவாசகம் 5-12) என்பார் மணிவாசகர். நலம் என்னும் சொல் அன்பு என்னும் பொருளது; ஈண்டு சான்றோரின் அருளைக் குறித்து நின்றது. சிவம் என்னும் சொல் முத்தி, வீட்டின்பம் என்பதைக் குறிக்கும். சமண சமய நூலாகிய சீவக சிந்தாமணி, ''நின்று பற்று ஆர்வம் நீக்கி நிருமலன் பாதம் சேரின் அன்புவிற்று உண்டு போகிச் சிவகதி அடையலாமே'' (3105) எனக் கூறுவது இதனை அரண்செய்யும்.

**37. ஒலித்தகடல் உடையுடைப்பார் வாழ்வை நம்பி,**
**உவகைவளர்ந் தும்தளர்ந்தும் உள்ளம்சாலச்**
**சலித்த என்னை, இன்னம் இன்னம் பிறப்பிறப்பாம்**
**சங்கடத்தில் வீழ்த்தாதுஉம் சதங்கை தண்டை**
**கலித்ததிரு வடிஅடியேன் முடிமேல் சூட்டி,**
**கரையில்பர மானந்தக் கதிசேர்த் தாள்வாய்;**
**பலித்தஇன்பன் பருக்கருளக் கீர நத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானே.**

பொழிப்புரை : நிச்சயமான மகிழ்ச்சியை அடியார்களுக்கு வழங்குவதற்காகவே கீரநத்தத்தில் எழுந்தருளியுள்ள விநாயகப்

பெம்மானே! சப்திக்கின்ற சமுத்திரத்தை ஆடையாகப் பெற்றுள்ள உலகத்தில் வாழ்கின்ற வாழ்க்கையை விரும்பி, இன்பம் வந்தபோது குதூகலித்தும், துன்பம் வந்தபோது மனம் சோர்ந்தும், மிகவும் மனம் கலங்கியுள்ள அடியேனை மீண்டும் மீண்டும் சனன மரணங்களாகிய துன்பத்தில் தள்ளாமல், தேவரீரின் சதங்கைகளும் தண்டைகளும் ஒலிக்கின்ற திருவடிகளை என்தலைமேல் அணிவித்து எல்லையற்ற பேரின்பமாகிய முக்திநிலையில் வைத்து ஆட்கொள்வீராக.

குறிப்புரை : **நம்புதல் -** விரும்புதல்; நம்பும் மேவும் நசை ஆகும்மே என்பது தொல்காப்பியம்(813). **சதங்கை தண்டை** - உம்மைத்தொகை

நூற்பயன்

38. **மதித்துவழி படும்திருத்தொண் டன்பர்க் கிம்மை**
**மறுமைபொலி நலங்கள்எலாம் மருவிவாழப்**
**பதித்தருள்மெய்க் கருணையினால் கீரநத்தப்**
**பதிக்கோயில் கொண்டகண பதிப்பெம் மானைச்**
**சதித்தமல மாயைவலி அருபே ரின்ப**
**சாகரம்சேர்ந் திடக்தந்த சாமி அன்பின்**
**துதித்தஇசைப் பதிகம்உவந் திசைப்போர் யாரும்**
**துன்பறுபே ரின்பநலம் தோய்தல் மெய்யே.**

பொழிப்புரை : அடைக்கலம்அருளும் இறைவனாகப் போற்றி வணங்குகின்ற அடியார்களை இவ்வுலகத்திலும் மேல் உலகத்திலும் சிறந்த இன்பங்களைப் பெற்று வாழச் செய்ய வேண்டும் என்றும் உண்மையான கருணையின் காரணத்தால் கீரநத்தத்தில் கோயில் கொண்டுள்ள கணேச மூர்த்தியை வஞ்சிக்கின்ற ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களின் வலிமை நீங்குவதால் உண்டாகின்ற பேரின்பக் கடலை அடைய வேண்டும் என்பதற்காகக் கந்தசாமி (சுவாமிகள்) ஆகிய அடியேன் பக்தியோடு போற்றிய இந்த பண்ணோடு கலந்த பதிகத்தை உள்ளன்போடு விரும்பிப் பாராயணம் செய்பவர்கள் எல்லோரும் துன்பம் இல்லாத பேரின்பமாகிய நற்பயன் அடைதல் உண்மை ஆகும். விநாயகர் பேரின்ப நலம் அருளுவார் என்பது கருத்து.

குறிப்புரை : அன்பர்க்கு வாழ, பதித்து அருள் மெய்க்கருணையினால் கோயில் கொண்ட கணபதி என முடிக்க. உரையில் கன்ம மலம் உபலட்சணமாகக் கொள்ளப்பட்டது. இசைப்பதிகம் எனபதற்குப் புகழைப் பாடுகின்ற பதிகம் என உரைப்பினும் அமையும்.



# 4. கீரநத்தம் விக்கினேச்சுரன் பதிகம்

காப்பு
வெண்பா

39. சீரணைத்தும் ஈந்து தினம்அன்ப ரைப்புரக்கும்
கீரணத்தத் தூடு கிளர்கருணைக் - காரனைய
விக்கினவி நாயகன்சீர் விண்டேத்த அன்னவனே
முக்கியக்காப் பாகிநிற்கும் முன்.

*கருத்துரை : அன்பர்களுக்கு எல்லா நலங்களையும் வழங்கி எந்நாளும் பாதுகாத்தருளும் கீரநத்த விநாயகரின் புகழைக் கூறிப் போற்ற அவரே காப்பாவார்.*

குறிப்புரை : **கார்அனைய** - மேகம் போல் கைமாறு கருதாமல் அருள்பாலிக்கின்ற, தொழில் உவமை.

நூல்
அறுசீர் விருத்தம்

40. பீடி யைந்தசெம் பவளமால் வரைஎனப்
பிறங்குமே னியொடன்பால்
மாடி யைந்திடு சித்திபுத் திஎனும்தாய்-
மார்களிப் புடன்வைக
மூடி கப்பரி தனில்எதிர் தோன்றி,என்
மூலவன் மலம்போக்கி,
வீடி சைத்திடாய்; கீரநத் தப்பதி
விக்கினேச் சுரத்தேவே!

*கருத்துரை : கீரநத்தக் கணபதியே! பெருமை மிக்க செம்பவள மலையை நிகர்த்த திருமேனியோடு, இருபுரமும் சித்தி புத்தி என்னும் தேவியர் மகிழ்ந்து அமர்ந்திருக்க, பெருச்சாளி வாகனத்தில் காட்சியளித்து, அடியேனின் ஆணவத்தை அடக்கி வீட்டுப்பேற்றை வழங்க வேண்டும்.*

குறிப்புரை : **பீடு இயைந்த மாடு** - பக்கத்தில், **மூல வன் மலம்** - தீமைகளுக்கு எல்லாம் ஆதிகாரணமாக உள்ளதும் வலிமை மிக்கதுமாகிய ஆணவம். வீடு இசைத்திடாய்.

41. **பயன்இ லாதலைத் தளவில்வன் துயர்துரும்**
**பாழ்உல கிடை என்னை**
**மயல்நீ லாவவைத் தலைக்கும்மா மாயையாம்**
**மனப்பகை தடிந்தன்பர்**
**செயல்நி லாவருட் பதத்தினில் உளஎனைத்**
**திருப்பல்நின் பரம்கண்டாய்;**
**வியன்நி லாவியற் கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே!**

*கருத்துரை :* பெருமை பொருந்திய கீரநத்த விநாயகரே! நிலையான பிரயோசனம் இல்லாதவாறு அடியேனை வீணே அலக்கழித்துக் துன்புறுத்தும் உலகியலில் மயங்க வைத்துச் சுழல்விக்கின்ற மாயையை நீக்கி நின் அடியார்களால் போற்றப் பெறும் திருவடிகளில் பொருந்துமாறு அருள நீரேகதி.

குறிப்புரை : **மயல்** - மயக்கம்

42. **கன்னல் அஞ்சிலை மதன்கரந் திசைதந்தபூங்**
**கமலமாம் கணைசெய்யும்**
**இன்னல் அஞ்சி, நின் சரணம்ஆ யினன்; உனது**
**இணைசரோ ருகத்தாளாம்**
**நன்ன லங்கொள்பூ முடிமிசைச் சூட்டி,மெஞ்**
**ஞானவாழ் வுறநல்காய்;**
**மெய்ந்ந லம்பொலி கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே!**

*கருத்துரை :* மேன்மைகள் நிறைந்த கீரநத்த விநாயகரே! மன்மதனின் தாமரை அம்பு செய்யும் துன்பமாகிய காமத்திற்கு அஞ்சி தேவரீரைச் சரணடைந்தேன். தேவரீரின் திருவடித் தாமரைகளை எளியேனின் தலைமீது அணிவித்து மெய்யறிவுமிக்க சிறப்பை வழங்குவீராக.

குறிப்புரை : மன்மதனின் மலர்க்கணை ஒவ்வொன்றும் ஒவ்வொரு செயலைப்புரியும், அதில் தாமரை தாம் விரும்புபவரையே எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கச்செய்யும். இதனை,

நினைக்கும் அரவிந்தம்; நீள்பசலை மாம்பூ;
அனைத்துணவும் நீக்கும் அசோகு - வனத்தில்உறு
முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லும்மதன் அன்பின் குணம்

**(இரத்தினச்சுருக்கம் 11)**

என்பதனால் அறியலாம்.

ஒரு தாமரைக்குப் பயந்து மற்றொரு தாமரையைச் சரண் அடைந்ததாகக் கூறியது ஒரு நயம்.

43. **பண்ண மைந்தநன் மறையினம் வழுத்தும்உன்**
**பாழிமான் மியம்பாடிக்**
**கண்ண மைந்திட நின்னடி கருதும்மெய்க்**
**காதல்கொள் வேன்என்னை**
**மண்ண மைந்தபொய் வாழ்க்கையில் அலைத்திடல்**
**மரபுகொல்? உரைசெய்வாய்;**
**விண்ண மைந்தசீர்க் கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே!**

*கருத்துரை : வானளாவிய புகழ் மிக்க கீரநத்த விநாயகரே!* வேதங்களால் போற்றப்பெறும் தேவரீரின் மிகுந்த புகழை இசைத்து, உம் திருவடிகளில் பொருத்த வேண்டி அவற்றைத்தியானிக்கும் பக்தியுள்ள அடியேனை நிலையற்ற உலகியலில் அலக்கழித்தல் முறையோ? கூறியருளுக.

குறிப்புரை : **பண்** - இசை. ***பாழி*** - பெரிய. நின்அடிக்கண் அமைந்திட அதைக்கருதும் மெய்க்காதல் கொள்வேன் என்னை என இயையும். கொள்வேன் வினையாலணையும் பெயர்.

44. **சமர்மு கப்பகை யாம்சுராந் தகன்நராந்**
**தகன்எனும் கொடியோருக்கு**
**அமல யோகியர்க் குரியநின் பதமலர்**
**அளித்தநிற் கடிநாயேன்**

முமல வல்லிருள் களைந்தருள் எனப்பல்கால்
மொழிந்திடல் மிகையன்றோ?
விமல நாயக! ஓங்குவண் கீரநத் தப்பதி
விக்கினேச் சுரத்தேவே!

*கருத்துரை : வளம் மிக்க கீரநத்தத்தின் விநாயக மூர்த்தியே! போரில் எதிர்த்த சுராந்தகன், நராந்தகன் என்னும் தீய அசுரர்களுக்குக் கூட குற்றமற்ற யோகியர்களாலேயே அடைவதற்குரிய - தேவரீரின் திருவடிக் கமலங்களை வழங்கிய கருணை மிக்க தங்கள் பால் - நாயனைய எளியேனுடைய மும்மலவாதனைகளை நீக்கியருளுக என வேண்டுதல் தேவையற்ற செயல் அல்லவா? தேவரீரே உம் கருணையால் ஆட்கொள்வீர் என்பது கருத்து.*

குறிப்புரை : **சமர்முகப்பகை** - போரில் எதிர்த்த பகைவர். அங்க நாட்டின் அரசனாகிய இரவுத்திர கேதுவின் இரட்டைப் பிள்ளைகள் சுராந்தகன், நராந்தகன் என்போர். இவர்கள் தவத்தால் பல வரங்களைப் பெற்று மக்களையும், தேவர்களையும் துன்புறுத்தினர். விநாயகர் காசியப முனிவரின் மனைவியாகிய அதிதியின் முன் ஒரு குழந்தையாகத் தோன்றி, மகோற்கடர் எனப் பெயர் சூட்டப்பெற்று, அவ்விரட்டையர்களைத் தோற்கடித்து ஆட்கொண்டார்.

**அமல** - குற்றமற்ற. **மும்மலம்** - ஆணவம், கன்மம், மாயை

45. வார ணாசிநன் னகரிடை அமைந்துளார்
மனைதொறும் விருந்தேற்றுப்
பேர ருட்டிறல் காட்டும்நீ இன்றுனைப்
பேணும்என் சிறுநெஞ்சம்
தேர ஓர்விளை யாட்டியற் றில்தடை
செய்பவர் எவர்? சொல்வாய்;
வீரர் மிக்கசீர்க் கீரநத் தப்பதி
விக்கினேச் சுரத்தேவே

*கருத்துரை : வீரம் மிக்கவர் நிறைந்துள்ளதால் பெருமைபெற்ற கீரநத்தத்தின் கணபதியே! காசி நகரில் முனிவர்களின் வீடுகள்தோறும் போய் முனிபத்தினிகள் அளித்த விருந்தை ஏற்றுக்கொண்டு உம் கருணைப் பெருக்கத்தைக்காட்டியருளிய தேவரீர். உம்மைப்*

போற்றுகின்ற அடியேன் மாட்டும் ஒரு திருவிளையாடலைப் புரிந்தால் தடுப்பவர் உண்டோ? கூறியருள்வீராக. தடுப்பவர் இல்லை என்பது கருத்து.

குறிப்புரை : சிந்து என்னும் அசுரனால் ஏவப்பெற்ற பல படைத்தலைவர்களையும் அவனையும் அழித்தபிறகு விநாயகர் முனிபத்தினியர் அளித்த விருந்தை ஏற்றுக் கொண்டார்.

46. **ஆற்றி னைப்புரை துறவில்ஓர் காலும்மிக்கு**
**அல்லல்செய் வினைமாயைச்**
**சேற்றி னூடொரு காலும்வைத் துளம்மிகத்**
**தியங்கும்என் றனைஇன்ப**
**ஊற்றி ணைந்தநின் சேவைமா றாதெனது**
**உளத்திடை எந்நாளும்**
**வீற்றி ருந்தருள்; கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே**

கருத்துரை : கீரநத்தக்கணபதியே! நதியைப் போன்று தூய்மையான துறவில் ஒரு காலையும், மிகத்துன்புறுத்துகின்றதும் இருவினைகளின் விளைவாவதும் உள்ளத்தை மயக்குவதுமாகிய உலகியலாம் சேற்றில் ஒரு காலையும் வைத்து அலமரும் அடியேனைப் பேரின்பம் சுரக்கின்ற தேவரீரின் பணிவிடையில் தவறாமல் ஈடுபடுத்தி, என் மனத்தில் எப்போதும் எழுந்தருளி விளங்க வேண்டும்.

குறிப்புரை : **சேவை** - பணிவிடை, **மாறாது** - தவறாமல்

47. **திசைமு கன்விதி ஒழித்தடி யவர்க்கருள்**
**தெய்வநா யக! யான்என்**
**தசைஉ டல்பொருள் ஆவியா தியஉன்பால்**
**தந்தனன்; உவந்தேற்றே**
**இசைகு லாவியல் பத்தர்கொள் மெய்ந்நிலை**
**ஏற்றிடும் பரம்உன்றன்**
**மிசைய தாகும்காண்; கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே**

கருத்துரை : கீரநத்த விநாயகரே! பிரமனால் விதிக்கப் பெற்ற ஊழ்வினையை இல்லாமற் செய்து அன்பர்களுக்கு அருள் பாலிக்கும் தலைவரே! அடியேன் என் உடல் பொருள் ஆவி முதலிய அனைத்தையும் தேவரீர் முன் சமர்ப்பித்து விட்டேன். தாங்கள் ஏற்றுக் கொண்டு அடியார்களோடு கூட்டவேண்டும். இந்தப் பொறுப்பு தங்களுடையதே.

குறிப்புரை : **தசை உடல்** - ஊனுடம்பு, மூன்றன்தொகை. **இசை** - புகழ், **இயல்பத்தர்** - (அன்பு நெறியில்) செல்லுகின்ற அடியார்கள், வினைத்தொகை. **மிசையது** என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. **காண்** - முன்னிலை அசை.

**48. கற்ப ணித்தகை கொண்டநின் அடியவர்**
**கணத்திவன் ஒன்றென் னும்**
**பொற்ப ணிப்புகழ் வாய்ந்து,மா தவர்பணி**
**புரிந்திகன் றிடுவஞ்சத்**
**துற்ப ணித்தகை யவர்த்திருத் திடஅருள்**
**தோய்;அர தனநாம**
**வெற்ப ணித்துறும் கீரநத் தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவே**

கருத்துரை : இரத்தினாசலத்திற்கு அருகே உள்ள கீரநத்தத்தின் விநாயகப்பெருமானே! தங்களைத் தவிர வேறு யாரையும் பரமாகக் கருதாத விரதத்தை உடைய நின் அடியார்களின் கூட்டத்தில் ஒருவனாகப் பெருமைப்பட வைத்து, சிறந்த தவசிகளுக்குப் பணிபுரியச் செய்து, பகைத்திடும் தீய பாம்பைப் போன்றவர்களைத் திருந்தச் செய்ய அடியேனுக்கு அருள்புரிவீராக.

குறிப்புரை : **கற்பு** - ஒருவனைப்பற்றி ஓரகத்திருக்கும் மனத் திண்மை. **பணித்தகையவர்** - பாம்பின் தன்மையைக் கொண்டவர்கள். **அரதனம்** - இரத்தினம், **நாம** - பெயர்உடைய

**49. சளம்கொள் மாயைசெய் இன்பதுன் பங்களின்**
**சான்றதாய் என்நெஞ்சம்**
**துளங்கு றாது நின் றுன்பர சுகத்தினுள்**
**தோய்தர அருள்செய்வாய்;**

வளங்கு லாவியற் சிரவண புரக்கவு
மாரர்கட் குரித்தாகி
விளங்கும் மாட்சிசால் கீரநத் தப்பதி
விக்கினேச் சுரத்தேவே

*கருத்துரை : வளமை மிக்க சிரவையம்பதிக் கௌமாரர்களுக்குரியதாகப் பொலியும் கீரநத்தத்தின் கணபதியே! வஞ்சனைபுரியும் மாயையின் விளைவாக உண்டாகும் இன்ப துன்பங்களிற் சிக்கி அடியேனின் உள்ளம் கலங்காதபடி பக்தி நெறியில் நின்று தேவரீரின் வழிபாட்டால் விளையும் பேரின்பத்தில் திளைக்கச் செய்வீராக.*

குறிப்புரை : **சான்றது** - சாட்சி, அது பகுதிப்பொருள் விகுதி. நின்று உன்.

நூற்பயன்

50. **தகையி ராமானந் தக்குரு மகிழ்மரு**
**தாசலத் தவன் அன்பின்**
**மிகையின் மேனிகொள் கீரநத்தப்பதி**
**விக்கினேச் சுரத்தேவின்**
**நகைம லர்ப்பாதத் திற்கந்த சாமிஉள்**
**நயந்தணி பாமாலை**
**வகைப டத்துதிப் போர்எலாம் இன்பமெய்**
**வாழ்வினுக் குரியோரே.**

*கருத்துரை : தவத்திரு இராமானந்த சுவாமிகளால் விரும்பப் பெற்ற மருதாசல சுவாமிகளின் பத்திக்காக கீரநத்தத்தில் திருக்கோயில் கொண்டு விளங்கும் விநாயகப் பெம்மானின் திருவடிகளில் கந்தசாமி (சுவாமிகள்) பத்தியுடன் அணிவித்த இந்தப் பதிகத்தை முறையாக ஓதி வழிபடுவோர் எல்லோரும் பேரின்பம் பெறுவர்.*

குறிப்புரை : அன்பின் மிகையின் மேனிகொள் என்றது இந்த விநாயகர் மருதாசல சுவாமிகளால் எழுந்தருளச் செய்யப்பெற்றவர் என்ற வரலாற்றுக் குறிப்பு. **வகைபட** - முறையாக. உள்ளன்போடு.

## 5. விநாயகர் எழுபா

காப்பு வெண்பா

51. பார்அனத்தம் எய்தாமல்ப் பார்த்துக் கருணைபுரி
கீரணத்துத் தந்திக் கிளர் முகனைச் - சார
எழுபாவாற் பாடற் கினியதுணை அன்னோன்
வழுநீக்கும் பாதமலர்.

எழுசீர் விருத்தம்

52. விக்கின ராசப் பெயர்புணைந் தருள்நின்
விரைமலர்க் கழல்கரு தடியேன்
உக்கிர கால கன்மவா தனைமிக்
குழல்வதுன் அருட்பதுவோ
வக்கிர வெண்கோ டொன்றொடித் திகன்ற
வாரண முகத்தசு ரன்உளம்
பக்கிட எறிந்த தீரகீ ரநத்தப்
பதிக்கணபதிப்பெரு மானே

53. ஐந்தருக் குலங்கள் ஒல்கமெய் யன்பர்
ஆசைமுற் றளித்தருள் உன்சீர்
பைந்தமிழ்க் கவிகொண் டேத்திடும் எனைப்பொய்ப்
பாழுல காசையுட் படிந்து
நொந்தல மருவார் தம்மில்ஒன் றாக
நுடங்கவைத் திருப்பதென் நுவல்வாய்
பந்தமுற் றறுத்தாண் டருள்செய்கீ ரநத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே

54. கூர்வைவேல் உறழ்அஞ் சனக்கருந் தடங்கண்
கோதையர் முடைத்தசை பொதிதோல்
போர்வைகண் டுருகி அவர்கள்குற் றேவல்
புரிந்துழ லாதுனைப் போற்றித்
தூர்வைநாண் மலர்கொண் டருச்சனை புரிந்துன்
சொருபம்நேர்ந் துருகும் மெய்ஞ் ஞானப்
பார்வைஈந் தெனைஆண் டருள்கீர நத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே.

55. பித்தியல் உலக நெறியைமிக் குவந்து
பிழைபல புரிந்தகம் பெருக்கி
புத்திஎன் றுழல்வார் வசம்உறா துன்தாள்
போற்றும்மெய் அன்பர்தாள் துகளே
முத்திசா தனம்என் றமைந்தவர்க் காட்செய்
மூதறி வாம்கடற் பெருக்கும்
பத்தியா மதிதந் தெனைக்கொள்கீ ரநத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே.

56. பலதிசைக் கிடந்தோர் காற்றினில் ஒன்று
பட்டுமேல் எய்திடும் காலால்
விலகிடும் திரணம் ஒத்துடன் கூட்டும்
வினையரைச் சுற்றம்என் றுழன்றேன்
திலமிசை நெய்போல் அரைக்கணம் பிரியாத்
தேவநின் கழல்கள்சித் திக்கேன்
பலனுறும் வண்ணம் பணித்தகீ ரநத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே

57. வரந்தரும் தெய்வ மணம்கமழ் சிந்தா
மணிஎனும் நின்திரு வடியில்
திரம்பெறு பத்திச் செல்வமும் ஞானத்
தெளிவுமிக் கொன்றிரண் டென்னா
உரம்பெறு வீடும் உதவிஎன் மயக்கம்
ஒழித்திடல் நின்பரம் கண்டாய்
பரம்பரை உதவும் மைந்தகீ ரநத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே.

58. விடிந்திடா மாயைப் பேரிருட் சிறையில்
வீழ்ந்துளம் வெம்பும்என் றன்னைக்
கடிந்திடு மாறுன் திருவுளம் கருதில்
கடையனேன் உய்வகை காணேன்
வடிந்திடாக் கருணை வாரியே சகச
வாழ்வருள் நின்பத மலரில்
படிந்திடப் புரிவாய் அபயம்கீ ரநத்தப்
பதிக்கண பதிப்பெரு மானே.

# 6. தண்டபாணி மாலை

காப்பு
(கட்டளைக் கலித்துறை)

59. வீர நத்தம் தங்கிய கர
மால், அயன், விண்ணவர்தம்
ஊர்,அநத்தம் தவிர்ந்து, இன்பு எய்தும்
வண்ணம் உதவும், எழில்
கீரம் நத்து அம்புய வேலானை
அன்பர் கிளர்ச்சி பொங்கும்
கீரநத்தம்தனில் போற்றத்
துணை அயில் கேகயமே

**நத்தம்** - சங்கு. ஊர் என்பதனை மால் (வைகுந்தம்), அயன் (சத்தியலோகம்), விண்ணவர் (அமராவதி) ஆகிய மூன்றுடனும் கூட்டுக. **அநத்தம்** - ஆபத்து. **எழில் கீரம் நத்து** - அழகிய கிளி ஆகிய அருணகிரிநாதர் விரும்பி உறையும். **கிளர்ச்சி பொங்கும்** - நிறைந்திருக்கும்.

நூல்
(எண்சீர் விருத்தம்)

60.உதய இளம் பரிதிகளின் திரளே போல
ஓங்கு திருமேனியும், பேர் ஒளி தோய் திங்கள்
வதனமும், பேர் அருள் விழியும், முறுவல் வாயும்,
வடிவேல் கொண்டு அவிர் கடப்ப மலர்த்தார் மார்பும்,
சிதம் உறு கோவணமும், எழில் தண்டும், வாமம்
திகழ் கரமும், மா மறையின் சிரத்து ஓங்கும் செம்
பதமும், அகம் புறத்து அமைப்பாய் - கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 1

**பரிதி** - சூரியன். **திரள்** - கூட்டம். **திங்கள் வதனம்** - மதி முகம். **முறுவல்** - புன்சிரிப்பு. **சிதம் உறு** - வெண்மையான. **தண்டு** - தண்டாயுதம். **வாமம் திகழ்** - துடையில் பொருத்தப்பட்டுள்ள. **பதம்** - திருவடி. அகம்புறம் ஆகிய ஈரிடத்தும் எண்ணும்மை விரிக்க.

61. கண்நிறையும் பெரு விருந்துஆம் உனது ஒப்பு இல்லாக்
காட்சிதனைக் கண்டு கண்டு களித்தே, என்பின்
உண்ணிறையும் பேர் இன்பக் கடலுள் மூழ்க
உன்னுகிலேன்; ஓயாத் துன்பு உதவும் மாயப்
புண் நிறையும் உடலை அபிமானித்து உள்ளம்
புழுங்குகின்றேன்; உன் திருத்தாள் புகுவது உண்டோ?
பண் நிறை வண்டு இசை பொதும்பர்க் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 2

**என்பினுள்** - இன்பம் கண்ணளவில் நின்று விடாமல் எலும்பையும் ஊடுருவிச் செல்லுமளவு. **உன்னுகிலேன்** - கருதுகின்றேன் இல்லை. **புண்** - நோய். **அபிமானித்து** - விரும்பி. **பண்** - ரீங்கார இசை. **இசை** - பொருந்தியுள்ள. **பொதும்பர்** - பூங்காக்களை உடைய.

62. கோண் இக்கை ஏந்தும் மதன் புகழ் கொண்டாடும்
கொடியர்தமைப் புகழும் வினை கொண்டோர் தம்முன்
நாணிக் கைசோர எனைப்படுத்தல் நிற்கு
ஞாயமோ? ஒப்பு அறு மெஞ்ஞான வாழ்வே!
காணிக்கை ஆக முற்றும் கொடுத்தேன் என்னைக்
காத்திடல் நின் பரமே காண்; கதி வேறு இல்லேன்;
பாணிக்கை தருமம் அன்று; கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 3

**கோண் இக்கை** - வளைந்த கரும்பு ஆகிய வில்லை. **படுத்தல்** - இருக்க வைத்தல். **பரமே** - பொறுப்பே ஆகும். **பாணிக்கை** - காலம் தாழ்த்தல்.

63. திரம்பயிலும் சிவ யோகப் பெரியோர் நெஞ்சில்
தெவிட்டாது தித்திக்கும் தேனே! வேதச்
சிரம் பயிலும் நின் திருத்தாள் துணை ஓர்கால் என்
சென்னிமிசை அமைக்கில், இருள் சிதைந்து போய், மெய்
வரம் பயில் சீர்க் கவுமாரர் உளம் கொள் இன்ப
வாழ்வு என் உளத்து அக்கணமே மருவுமே; நல்
பரம் பயிலும் தாரகம் நேர் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 4

**திரம் பயிலும்** - உறுதியாகச் சாதனை புரியும். **சிரம்** - உச்சி, முடிவு. **துணை** - ஜதை. **சென்னிமிசை** - தலையின்மேல். **இருள்** - அறியாமை. **மெய் வரம்** - நிலையான மேன்மை. **சீர்** - சிறப்பினை உடைய. **பரம் பயிலும் தாரகம்** - பிரணவ வடிவமான பரம்பொருள். ''ஆசுஇல் தாரகப் பிரமம் ஆம் அதன் பயன்'' என்பது கந்தபுராணம் (1-16-11).

64. இடையீடு இலாது வருத்திடும் பொய் மாயைக்கு
இலக்கு ஆகி, நின் திருத்தாள் ஏத்திடாதார் -
புடை ஈடுபட்டு, மெலிந்து அயர, என்னைப்
புரிந்தது இதுவரை போதும் போதும்; உண்மை
நடையீடு உற்று, உயர் பெரியோர் கொள்ளும் இன்ப
ஞான அநுபூதி நலம் நல்காய் - ஞாலம்
படை ஈடு உற்றவன் குரவா! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 5

**ஏத்திடாதார் புடை** - போற்றாதவர்களுடன். **நடையீடு** - ஒழுக்கம். **ஞாலம் படை** - உலகத்தைப் படைத்தல் ஆகிய. **ஈடு உற்றவன்** - பெருமைகொண்ட பிரமனின். **குரவா** - குருவே.

65. வியந்து அமரர் மனம் தேறும் வண்ணம், முன்னாள்
விண்டு விண்ட நின் புகழ்ச்சீர் விதங்கள் எல்லாம்,
நயம்தரு மாதுரிய இசைத்தமிழால் போற்ற
நசைத்தனன்; என் புன்மை மனம் நம்பும் வண்ணம்,
சயந்தன் உறு கனவில் வலிந்து இசைத்த மாற்றம்
சரத அநுபவத்து அளித்த தகை போல், இன்று என்
பயம் தவிர்த்து ஆண்டருள் - சரண் யான்; கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 6

**விண்டு விண்ட** - திருமாலால் சொல்லப்பட்ட. **மாதுரிய** - இனிய. **நசைத்தனன்** - விரும்பினேன். **புன்மை** - இழிந்த. **நம்பும்** - விரும்பும். **மாற்றம்** - சொல். சயந்தனின் கனவில் தோன்றி ஆறுதல் கூறியது கந்தபுராண வரலாறு. **சரத அநுபவத்து** - உண்மையில் நிகழும்படி.

66. முருகா என்று உனது ஓர் திருநாமம் அன்பின்
மொழிந்து அழுவாள் துயர் சகியாய் முன் நேர்ந்து, அம்கை
தரு காரணக் கடவுள் நீ, என் மீதில்
சலம் சாதித்து இருந்திடல் நல் தருமம் தானோ?
பெருகு ஆதரத் திருத் தொண்டு அடியார் தம்மைப்
பேணாயேல் அருள்க்கடல் ஆம் பேர் ஏன் கொண்டாய்?
பருகு ஆர்வத் திருவடிவாய்க் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 7

**அழுவாள்** - கை துண்டிக்கப்பட்டு வருந்துபவள் ஆகிய முருகம்மை. **சகியாய்** - பொறுக்கமாட்டாதவன் ஆகி. **சலம் சாதித்து** - பெரும் கோபம் கொண்டு. **ஆதர** - அன்புடன். **பேணாயேல்** - காப்பாற்றாவிட்டால்.

67. கணம் பொருந்தும் பிணி, கவலை, வினைகட்கு ஓர்கொள்
கலம் ஆகிக், கணத்து ஒழியும் காயம் ஆன
நிணம் பொருந்தும் சிறையிடைப்பட்டு அயர்வேன் உன்தன்
நிறை அருள் பூரண ஞான நிமலானந்த
மணம் பொருந்தும் கமலமலர்த் துணைசேர் இன்ப
வாழ்வு பெறும் நாளேனும் வழுத்தாய் - எந்தாய்!
பணம் பொருந்தும் வாய்ச் சிகியாய்! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 8

**கணம் பொருந்தும்** - கூட்டமாக வந்தடையும். **கொள்கலம்** - பாத்திரம். **கணத்து** - ஒரு நொடியில். **காயம் ஆன** - உடல் என்னும். **நிணம்** - கொழுப்பு. **அயர்வேன்** - சோருகின்ற அடியேன். **நிமல ஆனந்தம்** - குற்றமற்ற தூய இன்பம். **வழுத்தாய்** - கூறுவாயாக. **பணம் பொருந்தும்** - பாம்பைக் கௌவ்வியிருக்கின்ற. **சிகியாய்** - மயில்வாகனனே.

68. வேய் எனும் மென் தோள் மடவார் தம்மைக் கண்டு, உள்
வெறுப்பு உவப்பு உற்று அலையாதே, விரும்பிப் பெற்ற
தாய் எனக் கொண்டு அமைதரும் மெய்ச் சகச இன்ப
சாகரத்தில் குளிக்கும் வண்ணம் தயவு கூர்ந்து

நீ எனக்கு என்று அருள்புரிவாய்? கருணை ஞான
நிதியே! மூவரும் தொழும் சந்நிதியாய்! நாகம்
பாய் எனக் கொள் அரிமருகா! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 9

**வேய் எனும்** - மூங்கிலைப் போன்ற. பெண்களின்மேல் பெருங்காதல் கொள்வது மட்டும் அல்ல அவர்களை வெறுப்பதும் தவறு என்பது வலியுறுத்தப்படுகிறது. **அமைதரும்** - இயற்கையாக இயங்கும். **மெய்** - நிலையான. **சகச** - இயல்பான, செயற்கைத்தன்மை அற்ற. **இன்ப சாகரம்** - மகிழ்ச்சிக்கடல். நிதி என்பதனை கருணை, ஞானம் ஆகிய இரண்டுடனும் கூட்டுக. **மூவர்** - பிரமன், அரி, அரன். **நாகம்** - ஆதிசேடன். **பாய்** - படுக்கை.

69. முன் அளவுஅற்றிடும் அடியார்க்கு இரங்கி, அன்னோர்
முன் அவிர்ந்து, ஆண்டு அருள் புரிந்த முதல்வா! நீ தான்
என் அளவில் இரக்கம் ஓர் சற்று இல்லாரே போன்று
இருந்திடல் முறைதானோ? இகத்தின்மீதில்
பொன் அளவு அற்றிடத் தேடி, காத்து, மாயும்
பொய்யருக்குட்பட்டு நெஞ்சம் புண்ணாய் நொந்தேன்!
பன்னு அளவுஅற்றிடு வளம் சால் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 10

**இகத்தின் மீதில்** - இவ்வுலகியல் வாழ்வில். **பொன்** - செல்வம். **காத்து** - பாதுகாத்து. **மாயும்** - வீணே இறந்து போகின்ற. **பட்டு** - சிக்கிக்கொண்டு. **பன்னு** - கூறுவதற்கு.

70. கஞ்சன் எமன் அங்கசன் என்று ஓதுவார் செய்
கடல் அனைய துன்பம் அறக் கடத்தி, காக்கும்
தஞ்சம் உலகிடை அறியேன்; உன் பொன் பாதம்
சரணம் என வந்து அடைந்தேன்; தமியனேனை
வஞ்சன் என நீயும் ஒழித்திடுதியேல், யான்
மாய்ந்து பிறந்து உழல்வது அல்லால், வாழ்வது உண்டோ?
பஞ்சு அடிச் சாம்பவி மதலாய்! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 11

**கஞ்சன்** - பிரமன். **அங்கசன்** - மன்மதன். **ஓதுவார்** - சொல்லப்படுபவர்கள். **தஞ்சம்** - அடைக்கலம். **தமியனேனை** - துணையற்றுத்தனித்து நிற்பேனை. **சாம்பவி** - உமாதேவி. **மதலாய்** - மைந்தனே.

71. நிறை அருள் பூரண ஞான வடிவு ஆம்நீஎன்
நெஞ்சு அமைந்தும், உனது அடியேன் நீச ஆக்கைச்
சிறை அமைந்து, ஐம்புல வேடர் கைப்பட்டு, ஈனச்
சித்தசன் பூங்கணையால் உள் திகைத்து, மாயத்
துறையதனில் தளர்தல் நன்றோ? மெய்க் கௌமாரத்
தொண்டர் பெரும் பேறு அருள்வாய் - தொண்டகத்திண்
பறை அதிர் குன்றுகட்கு அரசே! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 12

**அமைந்தும்** - குடிகொண்டிருந்தும். **நீச** - இழிந்த. **ஆக்கை** - உடல். **ஈன** - கீழான. **சித்தசன்** - மன்மதன். **மாயத்துறை** - தீயவழி. **தொண்டகத்திண்பறை** - குறிஞ்சி நிலத்திற்குரிய வலியதும் சிறியதும் ஆகிய ஒரு தாளக்கருவி.

72. கூற்றம் என உயிர்வதைத்து ஊன் உண்டு, தேக்கும்
கொடியர் இறுமாந்து குதூகலிக்க, நின் தாள்
போற்று அடியார் செய்வகை ஒன்று அறியாது, உள்ளம்
புழுங்கு செயல் உனக்கு ஓர் இறும்பூது கொல்லோ?
மாற்று அறியாப் பசும்பொன்னே! ஞானானந்த
மணியே! என் குருமணியே! மகிமை இன்பப்
பால்(த்) தவள நீற்று ஒளி சால் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 13

**கூற்றம் என** - இயமனைப் போல. **ஊன்** - மாமிசம். **தேக்கும்** - தெவிட்டுகின்ற. **இறுமாந்து** - கருவம் கொண்டு. **குதூகலிக்க** - பெருமகிழ்ச்சி கொள்ள. **புழுங்கு செயல்** - கொதித்தல். **இறும்பூது** - பெருமை. **மகிமை** - சிறப்பு. **பால்தவள** - பால் போன்று வெண்மையான. **நீற்று** - விபூதியின்.

73. அப்புஅணி செஞ்சடையாற்கும், அகத்தியற்கும்,
அருணகிரி நாதனுக்கும் அருளால் முன்னாள்
செப்பு அணித் தாரகப் பொருளை, நாயேன் சித்தம்
தெளியும்வரை, இரங்கி உபதேசித்து ஆள்வாய் -
பைப் பணி வேந்து ஆன சிறு விரல்கொள் ஆழிப்
பார்வதித்தாய் பால் அருந்து பாலா! வேலா!
பப்பு அணி மிக்கு ஓங்கும் இயல் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 14

**அப்பு** - கங்கை ஆகிய நீர். **செப்பு** - உபதேசித்த. **அணி** - அழகிய. **தாரகப்பொருளை** - பிரணவத்தின் கருத்தினை. **சித்தம்** - அறிவு. **பை பணி வேந்து** - படத்தை உடைய பாம்புகளின் அரசன், ஆதிசேடன். **ஆழி** - மோதிரமாக உடைய. **பப்பு அணி** - மிகுகின்ற நலங்கள், பம்பு=பப்பு.

74. திரை அறு பேரின்ப நெடுங்கடலாம் நின் பொன்
சேவடியில் படிந்து, அருள் ஆம் செழுநீர் ஆர்ந்து,
வரை அனந்தத்தினும் குலவு உன் தளிதோறு உற்று,
வான் அமுதில் திருப்புகழ்ப்பா மாரி பெய்தே,
கரை அறும் அன்பு அடியருடன் உன் பொன் தாளில்
கலந்திட, உள் கருதல் முற்றக் கணித்து, ஈந்து ஆள்வாய் -
பரை வடிவு ஆம் அயில்(ப்) படையாய்! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 15

**திரை அறு** - அலைகள் இல்லாத, அசைவற்ற என்றபடி. **ஆர்ந்து** - குளித்து. **வரை** - மலைகள். **அனந்தத்தினும்** - பற்பலவற்றிலும். **தளி** - கோவில். **கரை அறும்** - எல்லையற்ற. **கருதல்** - நினைத்தல். **முற்றக் கணித்து** - நிறைவேறும்படி எண்ணி. **பரை வடிவு ஆம் அயில் படை** - சக்தியின் உருவம் ஆகிய வேலாயுதம்.

75. சதிக்கும் இயல் வஞ்சகப் பொய் மாயை ஆற்றும்
சகசாலத்து உழலாமல் தடுத்தாண்டு, உன்சீர்
துதிக்கும் இயல் வழங்கிடும் நீ, அடியேன் தன்னைச்
சோதனை செய்து இவண் அலைக்கத் துணிந்தது ஏனோ?

கதிக்கும் அகந்தையில் வணங்காது ஏகும் வேதன்
கலக்கம் மிகப் புடைத்து, அருளால் கரை தீர் இன்பில்
பதிக்கும் இயல் பதிக் குமரா! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 16

**சதிக்கும் இயல்** - ஏமாற்றும் தன்மையைக் கொண்ட. **சகசாலத்து** - உலகியல் ஆகிய சாலவித்தையில். **இவண்** - இப்போது, இங்கு எனினும் ஆம். **கதிக்கும்** - மிகுகின்ற. **வேதன்** - பிரமன். **புடைத்து** - அடித்து, குட்டி. **பதிக்கும்** - இருத்துகின்ற. **பதி** - பரம்பொருள் ஆகிய.

76. கற்புஅகத் தொண்டு அடியர் விருப்பு அனைத்தும் நல்கும்
கற்பகத் தண்தருவே! வான் கமழ்ந்த சந்த
வெற்பகத்து இயல் பரம குருவே! பத்தி
வேலையில் நின்று எழும் ஞான விளைவே! தொண்டர்
வல் பகட்டு அந்தகன் அயன் வேள் சமரால் நொந்து
வாடாது, உள் உறும் சகச வாழ்வே! தூய்மைப்
பற்பம் அணி அடியவர் சூழ் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 17

**கற்பு அக** - இறைவனைத் தவிரப் பிறருக்கு அடிமையாகாத உள்ளத்தை உடைய. **தண் தருவே** - குளிர்ந்த மரமே. **சந்த** - சந்தன மரங்கள் நிறைந்த. **வெற்பகத்து** - மலைகளுள். **வேலை** - கடல். **வல் பகட்டு அந்தகன்** - வலிமை மிக்க எருமையை உடைய இயமன். **வேள்** - காமன். **சமரால்** - போரால். **உள் உறும்** - உள்ளத்தில் எழுந்தருளும். **சகச** - இயல்பான. **பற்பம்** - திருநீறு.

77. ஓயாது உன் திருவடியே கருதி, நெஞ்சம்
உலையில் அமைதரும் மெழுகில் உருகி, என்றும்
வாயார அருட்புகழ்ச்சீர் பாடியே, விண்-
மாரி எனக் கண்கள் நீர் மாரிபெய்து,
நீ ஆகி நான் ஆடல் புரியும் வண்ணம்
நிகழ்த்துகின்ற தினமேனும் நிகழ்த்தாய் - கூடல்
பாய் ஆகத்து அமண் ஒழித்தோய்! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 18

***நீ ஆகி*** - நான் என்னும் தன்முனைப்பு நீங்கி, சிவோகம் பாவனையில் நின்று. **நிகழ்த்துகின்ற** - செய்கின்ற. **நிகழ்த்தாய்** - கூறுவாயாக. **கூடல்** - மதுரை மாநகரில். **பாய் ஆகத்து அமண்** - பாயை ஆடையாக அணிகின்ற சமணர்களை. இது ஞானசம்பந்தர்.

78. மூல மலப் பேர்இருளில் கிடந்து எய்ப்பேற்கு
முது அருளால் தனு கரண முயக்கம் நல்கும்
சால மருள் மாயையிடை சேர்த்தாய்; அந்நாள்
தத்துவப் பேய்க் குழுவில் உறச் சார்வித்து, என்றும்
காலன் எனைப் படுத்து துயர் கண்டும், நீ தான்
காணார் போல் இருத்தல் நன்றோ! கருணை வாழ்வே!
பால விழிப் பாலகனே! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 19

**மூலமலப்பேர் இருள்** - ஆணவம். **முது** - முற்றிய. **தனு** - உடல். **கரணம்** - அறி கருவிகள். **முயக்கம்** - தொடர்பு. நல்கும் மாயை சால மருள் மாயை என இயையும். **சால மருள்** - மிகவும் மயக்குகின்ற. **தத்துவப் பேய்க்குழு** - அசுத்த மாயா தத்துவங்கள் ஆகிய அலகைக் கூட்டம். **காலன்** - இயமன். **பால விழி** - (சிவபிரானின்) நெற்றிக் கண்ணில் தோன்றிய.

79. மண்என்றும் பெண்என்றும் பொன்என்றும் பொய்
வாஞ்சை அமைந்து ஓயாதுவருந்தித் தேடி,
புண் என்றும் பொருந்தும் மனக் கயவருள்ளே
புழுங்க எனை வைத்ததுடன் அருள் புரியாய்; நீதிக்
கண் என்றும் அமைந்தனையேல், நாயேன், மாயக்
கடல் கடந்து உன் திருவருட் சீர் காண்பது உண்டோ?
பண் என்றும் இசைந்திடு சீர்க் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 20

**வாஞ்சை** - ஆசை. **புண்** - மன வருத்தம். **என்றும்** - எப்பொழுதும். **நீதிக்கண்** - (தீயவனுக்குத் தண்டனை தந்தே ஆக வேண்டும் என்னும்) சட்டநெறியில். விதிகளைப் புறக்கணித்து இரக்கம் காட்ட வேண்டும் என்றபடி. **என்றும் பண் இசைந்திடு** - எப்போது இசை முழக்கம் பொருந்தியுள்ள.

80. மனம்ஆன கெடு மாயைப் பேய்க் குரங்கு என்
வசத்தில் ஓர் மாத்திரைப் பொழுதும் மருவாதே, சொப்-
பனம் ஆன பொய் உலகஇலவக் கோட்டில்
பாய்ந்து, பழம் நுகர்ந்திடுவான் பார்ப்பது ஏனோ?
இனம் ஆன என்ஒரு சிற்றுயிரைப் பாவ
இகல் ஒழித்து ஆண்டருள்; கதிவேறு இல்லேன்; நீள் விற்-
பன மானசத் தவர் வாழ் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 21

**சொப்பனம் ஆன** - கனவு போன்ற. **இலவக் கோட்டில்** - இலவமரக் கிளையில். இலவு காத்த கிளி என்பது பழமொழி. **இனம் ஆன** - (உயிரோடு) தொடர்பு கொண்டுள்ள மலங்கள் நீங்கும்படி. **ஒரு** - (அம்மலங்களோடு தொடர்பு இல்லாமல்) தனித்தன்மை கொண்ட. **இகல்** - பகை. **நீள் விற்பன** - மிகுந்த அறிவினை உடைய. **மானச** - மனதார நோன்பு கொண்டுள்ள.

81. நூல்அறிவு கொண்டு எதிர்வா ரோடு வாதம்
நுவன்று அகந்தைப் பிணிவளர்ந்து நுடங்கும் மாயைத்
தூல மதி அமைவேனை, வலிந்து பற்றிச்
சுத்த அறிவோர் உணர் உன் சுகசொரூபக்
கோலம் அமைத்திடல் உனது கடனே; நாயேன்
குயிற்று பிழை திருவுளத்துள் குறியேல் - எந்தாய்!
பாலனம் நேர் தவர் வழுத்தக் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 22

**வாதம் நுவன்று** - தர்க்கம் செய்து. **நுடங்கும்** - துவண்டு வீழும். **தூலமதி** - பருமையான அறிவு, நுட்பம் அற்றது என்றபடி. **சுக சொரூபக் கோலம்** - இன்பமயமான வடிவம், சாரூபம் வேண்டப்படுகிறது. **குயிற்று** - செய்கின்ற. **பாலனம் நேர்** - பாதுகாக்கப்படுதலை வேண்டுகின்ற. **வழுத்த** - போற்றும்படி.

82. வேலையிடை அமை துரும்பு போலும், ஆலை
மென் கரும்பு போலும், மிக வெதுப்பு கோடைப்
பாலையிடைப் பட்ட புழுப் போலும், மாயைப்
பகை உடலுள்பட்டு, அடியேன் பதைக்கும் தன்மை-

வாலை இடத்தார் தொழும் தேசிக! நீ தேர்ந்தும்
வாளாங்கு உற்றிடல் மரபோ? மாயை தீர்அப்-
பாலை அடியார்க்கு அருள்வான் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 23

**வேலையிடை** - கடலில். **ஆலை** - கரும்புச் சாறு பிழியும் யந்திரம். **வெதுப்பு** - வாட்டுகின்ற. **கோடை** - வெய்யில் காலத்தில். **பாலை** - பாலைவனம். **வாலை இடத்தார்** - பார்வதியைத் தம் இடப்பாகத்தே கொண்டுள்ள சிவபெருமான். **தேசிக** - குருவே. **தேர்ந்தும்** - தெளிவாக அறிந்திருந்தும். **வாளாங்கு உற்றிடல்** - சும்மா இருத்தல். **தீர்** - நீங்கிய. **அப்பாலை** - வீட்டுலகை. **அருள்வான்** - வழங்குவதற்காக.

83. எப்படியும் அப்பன் நமைக் கைவிடான் என்று
எண்ணி, இறுமாந்து திரிந்து இருக்கின்றேனைச்
செப்படி வித்தையாம் மாயைச் செகப் பொய் வாழ்வில்
தியக்க அமைத்து, இறுதியில் தென்திசை சேர் காலன்
கைப்படியச் செய்துவிடேல் - ஆணை! ஓர்; முக்-
காலும் நினக்கு உற்ற அடைக்கலம் யான் கண்டாய்;
பைப்படிவுஆர் உமைமதலாய்! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 24

**இறுமாந்து** - நம்பிக்கை கலந்த மகிழ்ச்சியுடன், அகந்தை அல்ல. **செக** - உலகியல் ஆகிய. **காலன்** - இயமனின். **ஓர்** - சற்றும் ஐயம் இல்லாமல் தெரிந்துகொள்வீராக. **பை படிவு ஆர்** - பசிய வடிவத்தைப் பெற்றுள்ள, பச்சை நிறம் வாய்ந்த.

84. கள்ளம் அறு மாதவத் தொண்டு அடியார் நெஞ்சக்
கமலம் விரித்து ஒளி பரப்பும் கதிரே! இன்ப
வெள்ள அருள்(ப்) பெருங்கடலே! தெய்வ வேழம்
மேவு புய வெற்பு உடைய வெளியே! மாயைத்
துள்ளல் ஒழித்து எனைத் திருத்தாள்த் துணையில் சேர்க்கும்
துணையே! சிற்சுகமே! பைஞ்சுகத் தோளானே!
பள்ள அறல் பெருகு வளக் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 25

**கள்ளம் அறு** - வஞ்சகம் இல்லாத. **கதிரே** - சூரியனே. **தெய்வவேழம்** - தெய்வயானையம்மையார். **வெற்பு** - மலை. **வெளி** - ஆகாயம். **துள்ளல்** - அடங்காமல் திரிதல். **துணையில்** - ஜதையின்கண். **சிற்சுகமே** - அறிவானந்தமே. **பைம் சுகத் தோளானே** - பசிய கிளி ஆகிய அருணகிரிநாதர் உறையும் புயத்தை உடையவரே. **பள்ள அறல்பெருகு** - ஆழமான நீர் நிலைகள் மிகுந்த.

85. வாள் ஆரும் கூர் விழியார் தமது மாய
வஞ்சக ஐம்புலப் போக வாரி ஆழ்ந்து,
மீளாத மன வழி போந்து அயரும் என்னை
மீட்டு அருள் என்று ஓதிடும் என் விண்ணப்பத்தைக்
கேளார் போல் நீ இருக்கில், இனி யார்பால் போய்க்
கிளத்திடுவேன்? நாயேற்குக் கிடைத்த செம்பொன்
பாளா! பொற்பாளா! வண் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 26

**வாள் ஆகும்** - கத்தியைப் போன்ற. **போக வாரி** - இன்பக்கடல். **மனவழி** - மனம்போன போக்கு. **கிளத்திடுவேன்** - கூறுவேன். **பாளா** - பாளம் (கட்டி) போன்றவரே. **பொற்பாளா** - அழகரே. **வண்** - வளப்பம் நிறைந்த.

86. கன்ம இகல் பெரும் சண்டமாருதத்தில்
கறங்கே போல் சுழன்று மனம் கலங்கி, நொந்து, உன்
பொன் மலர்த்தாள் துணைச் சரணம் புகவே நாடி,
போற்றி செய்வேன் எனக்கு அருள் நீ புரியாது, இன்னம்
வன்மம் நினைத்து உறல் அழகோ? இகழ்ந்து உறும் சூர்
மாவினை, வாகனம் கொடியா வைத்த கோவே!
பன் மலர்த் தேன் பெருகு பொழில் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 27

**கன்ம** - இருவினைகள் ஆகிய. **இகல்** - பகைமை பொருந்திய. **சண்டமாருதத்தில்** - புயலில். **கறங்கு** - காற்றாடி. **சரணம் புகவே** - அடைக்கலம் ஆகவே. **வன்மம்** - கோபம். **சூர் மாவினை** - சூரன் ஆகிய மாமரத்தை. **கோவே** - தலைவரே. **பொழில்** - சோலை.

87. சீர்த்தி மலி அருணகிரிநாதன் அன்பில்
செப்பு அமுதம் அனைய திருப்புகழ் ஓர் நாளும்
ஆர்த்தியுடன் ஓதி உன் தாள் பேணி அன்பில்
அகம் உருகேன்; இரும்பு அனையேன்; அணங்கு அனார்தம்
கூர்த்து இயல் கண் கணை தைக்கப்பதைப்புற்று அன்னோர்
குற்றேவல்(க்)கு ஓகைமிகும் கொடியேனைக் கண்
பார்த்து இரு தாள் புகல் அருள்வாய் - கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 28

***சீர்த்தி*** - பெரும்புகழ். ***ஆர்த்தி*** - அன்பு. **அணங்கு அனார்** - தேவலோக மகளிரைப் போன்ற அழகிகள். **கண்கணை** - விழி ஆகிய அம்பு, பார்வை. **ஓகை மிகும்** - விருப்பம் கொள்ளும்.

88. உன்னது அருள்ப் பேறு அமையாப் பாவம் ஆர் இவ்
உடலினில், இவ்உலகினில் பல் உகம் உற்றாலும்
இன்னல் அன்றி, பெறும் பயன் ஒன்று உண்டோ? நாயேன்
என்மிசை நின் திருவுள்ளம் இரங்கி, வல்லே
பொன் அடி சேர்த்தருள் - மாபாதகனைக் காத்த
புராரி நுதல் விழியில் அனல்(ப்) பொறியாத் தோன்றிப்
பன்ன அரும் ஆட்டு இயற்றி அணிக் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 29

**பல் உகம்** - பல யுகங்கள். **வல்லே** - விரைவில். **மா பாதகனைக் காத்த புராரி** - தந்தையைக் கொன்று தாயைப் புணர்ந்த பெரும் பாவி ஆகிய ஓர் அந்தணனைக் காத்து வீடளித்த சிவபிரான், இது திருவிளையாடல் மாபாதகம் தீர்த்த படலச் செய்தி. ''அன்னையைப் புணர்ந்து தாதை குரவனாம் அந்தணாளன்றன்னையும் கொன்ற பாவம் தணித்து வீடு அளித்தது'' என்பார் பரஞ்சோதியார். **புராரி** - முப்புரத்தை எரித்தவர். **பன்ன அரும்** - சொல்லிற்கு அடங்காத.

89. தேகாபிமான மயல்ப் பிணிப்புண்டு - அந்தோ! -
செய்வகை ஒன்று அறியாது உள் தியங்குவேனை
ஆகாயம் கடந்த பதத்து அமையும் வண்ணம்
அமைக்கில் உனைத் தடை புரிவார் அகிலத்து உண்டோ?

ஏகா அநேகா என்று ஏத்த நிற்கும்
இறையவனே! அணித் தெய்வயானை வள்ளி
பாகா! செம்பு ஆகா! சீர்க் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 30

**தேகாபிமான மயல்** - உடலையே தான் எனக் கருதி நேசிக்கும் மயக்கத்தில். **பிணிப்புண்டு** - சிக்கி. **பதத்து** - பதவியில். **அகிலத்து** - உலகில். **ஏகா** - தன்னந்தனி ஆனவனே. **அநேகா** - பற்பல வடிவங்களில் விளங்குபவனே. **அணி** - அழகிய. **செம்பு ஆகா** - தாமிரத்தைப் போன்ற சிவந்த மேனியனே. **சீர்** - சிறந்த.

90. ''கெட்ட சரக்கு உடையானுக்கு உரித்தே'' என்னக்
கிளத்து உலக மொழிக்கு ஓர் இலக்கியமாய் நின்ற
துட்டன் எனைப் படைத்து விடுத்தாய். ஆல்; யாரும்
துறந்து ஒழிக்கத் துற்குணமாம் துணை கொண்டு எய்ப்பேற்கு
இட்டம் உறும் நின் பாதம் அல்லால் போக்கு ஒன்று
இல்லை; அருள் வல்லை அளித்து ஏன்று கொள்வாய் -
பட்டு அணி மானார் நடம் தோய் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 31

**உடையான்** - அப்பொருளைச் செய்தவன். **உலகமொழி** - பழமொழி. **ஆல்** - அசை. **யாரும்** - எல்லோரும். **எய்ப்பேற்கு** - வருந்துகின்ற அடியேனுக்கு. **இட்டம் உறும்** - விரும்பப்படும். **போக்கு** - புகல், கதி. **வல்லை** - விரைவில், **ஏன்று** - ஏற்று. **மானார்** - மகளிர். **நடம்** - நாட்டியம்.

91. வளி அணையும் புன் புலக் கூடு ஓம்பி, உய்யும்
வழி அறியேன் எனை, வலிந்து, உன் மகிமைப் பொற்றாள்
வெளி அமையப் புரிந்தருள்வாய் - உலகம் உய்ய
வெற்பு அனைத்தும் கோயில் கொண்டு விளங்கும் கோவே!
கிளி அணையும் புயத்தோனே! குடிலை ஆன
கேகயனே! வாகை மிகக் கிளர் வேலோனே!
பளித நறுஞ்சுடர் பொலி சீர்க் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 32

**வளி அணையும்** - (பிராணவாயு ஆகிய) காற்று புகுகின்ற. **புல கூடு** - ஐம்புலன்களுக்கு இருப்பிடமாகிய உடல். **வெளி** - ஆகாயம். **கிளி** - அருணகிரிநாதர். **குடிலை** - பிரணவம். **கேகயம்** - மயில். **வாகை** - வெற்றி. **பளித நறும் சுடர்** - கருப்பூரத்தின் வாசனை மிக்க சுவாலை.

92. பீதகம் ஈட்டுதல் பெறும் பேறு என்ன, மாயப்
பெரு மோகம் மூடி, மதம் பெருகி, வெற்பு ஆம்
போதகம் ஒப்பார் புகழ் கொண்டாடும் ஈனப்
புலவர் பழித்திட அடியேன் புழுங்கலாமோ?
சீத கமலத் திருத்தாள் சூட்டி இந்நாள்
தேகாபிமானம் அறத் தீர்த்து ஆட்கொள்வாய் -
பாதகர் எய்தரியானே! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 33

**பீதகம் ஈட்டுதல்** - பொன்னைச் சம்பாதித்தல். **போதகம்** - யானை. புலவரும் பழித்திட என்க. **சீத** - குளிர்ந்த. **இந்நாள்** - இப்போது. **எய்தரியான்** - எட்டப்படாதவன்.

93. மை தாவும் கண்டர் தொழும் குருவாம் ஞான
வள்ளலே! முத்தமிழ்ப் பாவால் நாள்தோறும்
வைதார்க்கும் கருணைசெய் உன் புகழ்ச்சி ஓதேன்;
''மாது அரசே! பொன்னே! நல் மணி!'' என்று அன்பு
செய்தாலும், பிணங்கு குணத்து அணங்கு அனார் பொய்ச்
சிறுசுகம் வேட்டு, அவர் பிறகு திரிவேன் மாயப்
பைதாவி உய்வது உண்டோ? கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 34

**மை தாவும் கண்டர்** - கரிய கழுத்தர், நீலகண்டர். **மணி** - இரத்தினம் போன்றவளே, அண்மை விளி. **பிணங்கு குணத்து** - ஊடுகின்ற இயல்பினை உடைய. **சிறுசுகம்** - சிற்றின்பம். **வேட்டு** - விரும்பி. **மாயை பை தாவி** - பொய் ஆகிய உடலைக் கடந்து.

94. நிறுத்திடினும் உனது பதத் துணையினூடு ஓர்
நிமிடமும் நில்லாது உழல் என் நீச நெஞ்சம்,
வெறுத்திடினும் எனைச் சேட்டித்து உலக மாலில்
வீழ்த்தி அழுத்திட வெதும்புகின்றேன்; நீயும்
ஒறுத்திடுமாறு எண்ணில் ஏது புரிவேன்? நாயேன்
உய்யும்வகை உளதோ? எங்கு உறுவேன்? அந்தோ!
பறித்த தலையினர்க்கு அரியே! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 35

**நீச** - கீழான. **சேட்டித்து** - செயல்படவைத்து. **மாலில்** - மயக்கத்தில். **ஒறுத்திடுமாறு** - தண்டனை தரும்படி. **பறித்த தலையினர்க்கு** - (கத்தி முதலியவற்றால் அன்றி) கைகளால் பிடுங்கப்படும் முடியை உடைய சமணர்களுக்கு, பறிதலை அமணர். **அரியே** - சிங்கம் போன்றவரே, பகைவரே எனினும் ஆம். இது திருஞானசம்பந்தர்.

95. பொய்த் தரணி வாழ்க்கை, நிலை என்று, எந்நாளும்
பொன்மணி ஊண் என்று அலைந்து, பொன்றும் மாயப்
பித்தர் அணியுள் சுழன்று, சலித்தேன்; நாயேன்
பிழை அனைத்தும் பொறுத்தருளி, பிறங்கு ஞான
மெய்த்தரணிக்குள் விளங்கு உன் திருத்தாள் இன்ப
வீட்டில் அமைந்து இயல்சீல வியன் கௌமாரப்
பத்தர் அணியுள் புகுப்பாய் - கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 36

**பொய்** - நிலையற்ற. **தரணி** - உலகத்தின். **ஊண்** - உணவு. **பொன்றும்** - இறக்கின்ற. **அணியுள்** - கூட்டத்தில். **பிறங்கு** - விளங்குகின்ற. **ஞானமெய்த்தரணி** - அறிவுமயமானதும் நிலைத்ததும் ஆகிய இடம். **இயல்** - இயங்குகின்ற. **சீல** - நல்லொழுக்கம் வாய்ந்த. **வியன்** - பெருமை மிக்க.

96. தீங்கு அரும்பும் தீம்கரும்பு ஏந்திய ஐம்பாணச்
சித்தசன் செய் மாயையினுள் தியங்கி, நாளும்
கோங்கு அரும்பு நேர் தனத்தார்க்கு உவகை நல்கும்
குற்றேவல் புரிந்து, உழலும் கொடியேன், என்றும்

நீங்கரும் பேர் இன்பம் நல்கு உன் திருத்தாள் சூடி,
நெஞ்சம் நெகிழ்ந்து, என்பு உருகி, நிற்கும் தொண்டர்
பாங்கர் உறப் புரிந்தருள்வாய் - கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 37

**தீங்கு அரும்பும்** - (அடிபட்டார்க்கு) தீமை உண்டாகும். **தீம் கரும்பு** - இனிய கரும்புவில். **சித்தசன்** - காமன். **தியங்கி** - மயங்கி. **கோங்கு அரும்புநேர்** - கன்னிகார முகையைப் போன்ற. **தனத்தார்க்கு** - கொங்கைகளை உடைய மகளிருக்கு. **நீங்கும்** - அகலாத. **பாங்கர்** - பக்கத்தில்.

97. புகழ் இகழ் என்றிடும் இரண்டும் பொறையாக் கொண்ட
புனித கவுமாரர் குழுப் புகுந்து, உன் பொன்தாள்
திகழ் இயல் பேர் இன்பம் நுகர்ந்து, அமையும் உண்மைத்
திட அநுபூதிப் பெருக்கம் சேரச் செய்வாய் -
அகழ் இருஞ் சாகரத்து அணை இட்டு, இலங்கை மேவி,
அடல் கொள் இராவணன் முதலோர் அழிய, செங்கைப்
பகழிவிடும் மால்மருகா! கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 38

**பொறையாக் கொண்ட** - சுமையாகக் கருதுகின்ற. **அமையும்** - அதனால் ஏற்படுகின்ற. **திட** - உறுதியான. **அநுபூதிப்பெருக்கம்** - சொந்த அனுபவ மிகுதி. **அகழ்** - (சகரரால்) தோண்டப்பட்ட. **இரும்** - பெரிய. **சாகரத்து** - கடலில். **அடல்கொள்** - வலிமை மிக்க. **பகழி** - கணைகளை. **விடும்** - ஏவிய.

98. கொடு மாய ஐம்புல வேடுவர்கள் கூண்டு, என்
கோது இல் அறிவு அத்தனையும் கொள்ளை கொண்டு,
தடுமாறச் செய்தலின், உள் அயர்ந்து, சாலச்
சஞ்சல வாரிதி வீழ்ந்து, தவிக்கின்றேனைக்
கெடுமாறு கண்டிருக்க, கடலேபோல் உன்
கிருபை விழிமலர்கள் ஒப்புகின்றவேயோ?
படுவளம் சால் அணி விளங்கும் கீரநத்தப்
பதிக் கோயில் கொண்ட தண்டபாணித் தேவே! 39

**கொடு** - தீயவர்கள் ஆகிய. **கூண்டு** - ஒன்றாகக் கூடி. **கோது இல்** - குற்றமற்ற. **சால** - மிகவும். **சஞ்சல வாரிதி** - மனத் தடுமாற்றம் ஆகிய கடல். **கிருபை** - கருணை மிக்க. **படுவளம் சால்** - தாமாகத் தோன்றுகின்ற வளப்பங்களின் மிகுதியால். **அணி** - அழகு.

99. **சிரவைகொள் பொன்மன்றில் இராமானந்தப் பேர்த்**
**தேசிகனாய் எனது வினை தீர்த்து, ஞானப்**
**பரவையினுள் மூழ்குவிக்கக் கீரநத்தப்**
**பதிக் கொயில் கொண்ட தண்டபாணித் தேவை**
**அரவை நிகர் ஐம்புல வீறு அடு கௌமாரர்**
**அடித் தாது புனை கந்தசாமி அன்பன்**
**திர வைபவம் உறப் புகல் பாமாலை வல்லார்**
**திசைமுகன் கைப் பொறிவலியின் திறம் தீர்வாரே.** 40

**பொன் மன்றில்** - அழகிய சபையில். **ஞானப்பரவை** - அறிவுக்கடல். **அரவைநிகர்** - பாம்புகளைப் போன்ற. **வீறு** - வெற்றியை. **அடு** - அழிக்கின்ற. **அடித் தாது** - திருவடித் தூசி. **திர வைபவம் உற** - நிலையான பெருமை உண்டாகும்படி. **திசைமுகன்** - பிரமனின். **கைப்பொறி** - கரத்தால் எழுதப்பட்ட தலையெழுத்து, ஊழ்வினை. **திறம்தீர்வார்** - தன்மையிலிருந்து விடுபடுவார்கள்.

வாழி
(கலித்துறை)

100. **வாழி கீரநத்த தண்ட பாணி மா மயில், வேல்!**
**வாழி நீறு கண்டிகை எழுத்து ஆறு நான் மறை நூல்!**
**வாழி மெய்க் கவுமார ராமானந்த வரதன்!**
**வாழி அன்னவன் தொண்டர் நன்மைகள் எலாம் மாதோ!**

இது நூற்பயன். **கண்டிகை** - உருத்திராக்கம். **வரதன்** - வள்ளல்.

## 7. குமரகுருபரன் பதிகம்

காப்பு
(கட்டளைக் கலித்துறை)

101. கீரநத் தத்துத் தணந்துய்யு மாறு கிளத்தும் இயல்
கீரநத் தத்துத் தமிழ்கடம் போடணி கீர்த்திகொள்சேய்
கீரநத் தத்துள் அருந்தாமல் ஆண்டு கிருபைசெய்வான்
கீரநத் தத்துத் துதிக்கத் துணைஅயில் கேகயமே.

எண்சீர் விருத்தம்.

102. நிறைமதியம் புரைந்ததிரு முகமலரும், கருணை
நீள்விழியும், புன்முறுவல் நிலவணிச்செவ வாயும்,
நறைமலிசெங் கடப்பமலர்த் தொடைப்புயமும், சோதி
ஞானவடி வேலும், அன்பர் நாட்டம் அறா திலங்கும்
மறைமுடிவா கமமுடிவாம் பதத்துணையும் அடியேன்
மனத்தின்அகம் புறத்தும்என்றும் வயங்கிடுமா றளித்தோர்
குறையும்இல்பே ரின்பருள்வாய்;கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே!

103. கருவடிவை நான்எனவே கருதிஇறப் புதிப்பாம்
கடுமாயைக் கொடுவெயிலில் கலங்கிஇறைப் பேனைத்
தருவடிபுக் குலவுநர்தம் நிழலினைப்பின் அறியாத்
தன்மைஎன என்னதுபுன் தனுகரணம் அறநின்
திருவடிவில் சேர்த்தருள்வாய்; நீகைவிடில் வேறோர்
திக்கறியேன்; செப்பல்என்? நின் திருவுளம்தே ராதோ?
குருவடிவாய் அன்பர்தொழக் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிக்கைக் குமரகுரு பரனே.

104. மச்சை முதல் பகர் ஏழு தாதுவின் ஆம் வடிவே
மங்கையர்க்கும் என்ன இழவமுத்திஉறுத் திடினும்
இச்சைஅவர் மீதமையப் புரியும்இருள் மலத்தின்
இகல்அறமெஞ் ஞானஒளி ஈத்தெனைஆண் டருள்வாய்

பச்சைநிறக் குறமாதுக் குரிமைமிகும் கணவா
பருவதம்முற் றிலும்கமழ்ந்த பதுமலர்த் தாளாய்
கொச்சைநகர்ச் சுதன்ஆவாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

105. அழிவழியில் விரைந்தோடும் பொய்யுலக மாந்தர்
அறைபெருமைக் காம்முயற்சி அமைந்துழன்றேன் ஆன்றோர்
மொழிவழிநின் றிடும்ஏவல் புரிந்தவர்தாள் துகளே
முத்திநிலைச் சாதனமா முன்னிநின்சீர் பாடி
விழிவழியும் ஆனந்த அருவிபடிந் துலவா
மெய்யின்ப வாழ்வுறநின் விழிகொள்அருள் என்மேல்
கொழிவழிநாள் யாதுரைப்பாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

106. பகையுறும்மா மாயைஉடற் பாலையில்இந் திரியப்
பரல்உறுத்த லால்தளர்ந்து பதைக்கும்என் ஆ ருயிரின்
தகைஒழியு மாறிணைதீர் அருட்புனல்ஈத் துன்தாள்
தருநிழலில் அமைத்தருள்வாய் சரணம்மற்றொன் றறியேன்
மிகையுறுபே ரருட்கடலே மெய்த்தவத்தோர் உளத்தில்
விளைதரும்ஞா னானந்த விருந்தே மேல் வெளியே
குகையருள்மா தவர்நிலம்நேர் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

107. பிழைஅனந்தம் முன்புரிந்தேன் புரிகின்றேன் புரிவேன்
பேய்அணையேற் கீதுபுதுப் பெற்றிமைஅன் றிதுபோல்
விழைவளித்தா ருயிர்த்திரளைக் காத்தருளக் கருணை
விருதுகட்டி உறும்உனக்கு வெறுத்தல்இயல் பாமோ
மழைமுகில்நா ணுறக்கருணை பொழிவிழியாற் பார்த்தேன்
வஞ்சைமுடித் துன்திருத்தாள் மலரில்உறச் சேர்ப்பாய்
குழைபொலிதண் டலைமலியும் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

108. புவிகற்ப கத்தருவார் விண்அமையும் மாயப்
புன்புலபோ கங்கள்தமைப் பொருளெனஉள் விரும்பித்
தவிகற்ப வாசம்உறும் பிறப்பிறப்பாம் அன்பு
சாகரத்துள் வீழ்ந்துமிகத் தளரும்எனக் கன்பாற்
சவிகற்ப நிருவிகற்பம் என்னும்இரு நிலையும்
தாண்டினர்எய் தியற்கைஇன்பச் சகசநிட்டை அருள்வாய்
குவிகற்ப கத்தர்தொழக் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

109. காவிமலர்க் கண்மடவார் சேனைகொள்அங் கசன்எண்
கண்ணுடையான் கூற்றெனும்முக் கடும்பகைவர் அடியேன்
ஆவிஅல மரப்படுத்தும் கொடுமைமுற்றும் அறிந்தும்
அறியார்போன் றிருந்திடல்உன் அருட்கிசைவ தாமோ
பாவினம்கொண் டேத்தடியார் ஏவல்புரி பரமன்
பாலவிழி மீதில்அருட் பாலன்என உதித்தாய்
கூவிஎனை ஆண்டருள்வாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

110. வேளெனவந் திடும்மதன்எண் ணிலார்க்கும்இன்பம் வலிந்தே
விரைந்தளிப்பான் துணிந்துறச்செவ் வேள்எனஉற் றிடும் நீ
ஆளெனப்பா வினம்கொடுதோத் திரம்செயினும் இரங்காது
அகத்தில்வன்மம் எண்ணியுறல் அழகோசொற் றருள்வாய்
கேளெனக்கொண் டோவணங்கா அயனைவலிந் தடித்துக்
கேள்எனமெய் உபதேசம் கிளத்தினைவான் உலவும்
கோளெனும்வில் மணிச்சிகரிக் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

111. செங்களத்திற் படைகொடமர் புரிந்தகொடும் சூரன்
சிந்தைஅழல் மெழுகேபோல் செய்தருள்மெய்ஞ் ஞான
மங்களவான் சொரூபம் நின்சீர் பாடிமிகப் போற்றும்
வாஞ்சை அமை வேற்கொருகால் வழங்கிட ஒண் ணாதோ
பைங்களபக் குரும்பைமுலை வள்ளிமண வாளா
பரிமளச்செங் கடப்பமலர்ப் படலைபுனை தோளா
கொங்களவும் மலர்ப்பொழில்சூழ் கீரநத்தக் கோயில்
கொண்ட விரும் தண்டணிகைக் குமரகுரு பரனே

112. ஆடிஅமை தரும்பருவத் துன்புகழ்ச்சீர் ஏத்தும்
ஆவல்அளித் துன்பதத்தன் பமையமுயல் இதுநாள்
ஊடியதன் மையின்மாயை யூடியல்வித் தொருசற்
றுளம்இரங்கார் போல்சோதித் துறுதல்முறை தானோ?
வாடிஅகம் மெலிந்தனன்காண் மெஞ்ஞானத் திருக்கண்
வழங்கிஇயற் சகசஇன்ப வாழ்வில்அமைத் தருளக்
கூடிஅகம் கலந்திடுவாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே

113. விண்டலையார் தண்டலைசூழ் வெற்பினம்முற் றணைந்துன்
விரிந்தஅருட் புகழ்தமிழ்ப்பா மேகம்எனப் பொழிந்தே
வண்டலைசெய் கடம்பெனத் திண் புயத்தணியும் இன்ப
வாழ்வளிக்கும் தினம்எனினும் வாய்மலர வேண்டும்
வெண்டலைகை ஏந்தும்அரண் தன்நுதல்சேர் அங்கி
விழியினிடை புலிங்கம்என மேவியருள் வடிவம்
கொண்டலைஆர் தடத்துறல்போல் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

114. தருஉலகோர் ஏத்திசைரா மானந்த நாதன்
தாட்கடிமை யாம்மருதா சலத்தவன்உள்அன்பில்
குருஉருவாய் புரிபணிநீள் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனை
அருஉருஎன் றிகல்அமைவார் பொதுவாம்கௌ மாரர்
அடித்துகள்தோய் முடிக்கந்த சாமிதுதித் திடும்பா
மருவும்அன்பால் ஓதிவழி படும்திருத்தொண் டடியார்
வான்புகழ்மெய்ச் சித்திமுத்தி வாழ்வடைவார் தாமே.

## 8.குமரகுருபரன் சட்கம்

காப்பு
(வெண்பா)

115. கொங்குமலி பூம்பொழில்சூழ் கோலமிடு கீரணத்தில்
தங்கி அருள்புரியும் சண்முகனை இங்கிதமாய்
ஆறுபாப் பாட அருந்துணைஆம் யானை முகன்
நாறுமலர்ப் பாதநளி னம்.

நூல்
(எண்சீர் விருத்தம்)

116. பூரணவான் மதிஅனைய முகமும்மிகு கருணை
பொழிவிழியும் புன்முறுவல் பூத்தவிர்செவ் வாயும்
வாரணவான் கேதனமும் கிளிஅமைநின் தோளும்
மலர்க்கடம்பு கூதளம்நீள் மாலைஅமை மார்பும்
காரணமெய்க் கவுமாரர் மனம்நிகர்குன் றினத்தில்
கமழ்ந்தொளிர்தாள் மலர்களும்என் கருத்தமையப் புரிவாய்
கூரணலோர் அயிற்படையோய்! கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே!

117. மூலமலத்திச்சைசெயல் அறிவொழிந்தெய்த் தேனை
மூதருளால் மாயையுடன் முயக்குவித்தாய் அதுசெய்
சாலமயக் கேழைஎன்னால் ஒழிக்கரியேன் கணமும்
சகிக்கவும்மாட் டேன்கருணைத் தடங்கலே வலிந்துன்
சீலமலர்ப் பதம்புகுமெய்த் தொண்டர்உளத் தமைத்தி
சின்மயமங் களபதம்என் சென்னிமிசை சூட்டிக்
கோலமுமு தளித்தருள்வாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

118. கள்ளமிசை கலந்தஉப சாரஉற வினர்உட்
களிப்பமையப் பணிபுரிந்து கவலையுற்றேன் அலதென்
உள்ளமிசை கலந்தோர்கணம் நீங்கநின் திருத்தாட்
குவந்துபணி புரிகிலன்யான் உய்யும்வகை உண்டோ

வெள்ளமிசை துயின்றிடுமால் ஏந்திடும்நின் புகழ்ச்சீர்
விண்டுகளித் தேத்தும்இன்ப மெஞ்ஞானா னந்தம்
கொள்ளமிசை எனக்கருள்வாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

119. நிசஅடியார் புனைவேடம் கொண்டதல்லால் நின்தாள்
நினைத்தொருமாத் திரைப்பொழுதும் நின்றறியா மாயைக்
கசடுடையேன் ஆயினும்நின் பெரும்புகழ்ச்சீர் பாடிக்
கசிந்துருகும் பேராவல் கலந்தமைந்தேன் கண்டாய்
வசமனத்தொண் டர்கள்நிலையில் வைத்தருள வேண்டும்
வன்மம்எண் ணேல்அன்பர் வண்டமிழ்ப்பா வள்ளி
குசவிருப்பில் ஏற்றருள்வாய் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

120. பொன்தேடி வைத்திறத்த லேஅருமா னிடர்கள்
புரிசெயல்என் றுளம்துணிந்த புல்லர்அகக் குறியில்
நின்றேஎன் நெஞ்சயரச் செய்திடுமா றந்தோ
நீ துணியில் நாயடியேன் நிகழ்த்துவதொன் றுண்டோ
என்தேகம் ஆதியகொண் டுன்னருள்மெய் அளித்தென்
இன்னல்முழு தொழிந்திடுநாள் ஏதுரையாய் பவளக்
குன்றேகுன் றுறழ்சிகரிக் கீரநத்தக் கோயில்
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

121. மாசில்அடி யார்மருவூர் தேடிவிளை யாடி
மகிழ்ந்துநிற்பாய் என்றருட்சீர் வயங்கருணை நாதன்
பேசியற்பா விளங்கஅடி யார்வருந்த வருந்து
பெற்றிஇலங் கிடமணிப்பொற்பிறங்கல்நிகர்த் தொன்றும்
பூசியநீற் றக்கமணிக் கவுமாரர் அன்பில்
புரியபணிமிக் குவந்தருள்மெய்ப் பொலிபடைத்து
கோசிகன்தோய் தலத்தணித்தாம் கீரநத்தக் கோயில் வந்து
கொண்டவிரும் தண்டணிகைக் குமரகுரு பரனே.

## ௯. ஸ்ரீ கரிவரதராஜர் பதிகம்

காப்பு வெண்பா

122. நீரும் புகழ்ச்சீர் நிறைகீர நத்தநகர்
நாடும் கரிவரத ராஜன்மிசை - ஆகும்
துதிப்பதிகத் துக்காம் துணைஅன் னவன்தாட்
பதிப்பதின்மர் செம்பொற் பதம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

123. புன்முறுவற் செவ்வாயும் கருணை மாரி
பொழிவிழியும் நீலமணிப் பொலிவார் மெய்யும்
முன்முதிர்பீ தாம்பரமும் ஆழி சங்கம்
மிளிர்கரமும் அன்பர்உள்தோய் வியன்பூந் தாளும்
பொன்முளரிப் பூந்தவிசில் இசைசீ தேவி
பூதேவி யும்பொருமந்தப் புள்வேந் தின்மேல்
கொன்முதிர்ச்சீர்ச் சேவைநல்காய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

124. படம்பொருந்தும் கிரணமணிச் சூட்டுச் சேடப்
பாயல்மிசை பாற்கடலின் பாலும் விண்ணார்
வடம்பொருந்தும் மரகதப்பா சடையின் மீதும்
மகிமைஅருட் துயில்புரியும் வள்ளால் அன்பர்
புடம்பொருந்தும் நெஞ்சகத்தில் விழியில் என்றும்
பூத்தவிர்நின் தாள்என்முடி புனைந்தாட் கொள்வாய்
குடம்பொருந்து நடம்உடையாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

125. அம்பாய விழிமடவார் மண்பொன் னாம்பே
ராசைவலைப் பட்டுமனம் அயர்ந்து வாடித்
தெம்பாய மதிகலையா வண்ணம் உன்மெய்த்
திருவருட்சா கரநோக்கம் செலுத்தி ஆள்வாய்
நம்பாயர் அருந்தவமாய் நந்தகோபன்
நன் மனைவி யசோதை இரு நயனம் பூத்த
கும்பாய அணிச்சுதனே கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

126. கவிவிருந்த உவர்த்தரங்கக் கடல்சூழ் அண்டங்
களைஅருந்தும் திருவாய்போல் கடையேன் சொல்லைச்
செவிவிருந்து கொண்டருளும் என்றன் பில்லேன்
சிந்தைதுணிந் துன்புகழ்தோத் திரம்செய் திட்டேன்
அவிவிருந்த விச்சைஎலாம் போக உண்பே
ரருள்ஞான மேனிஎன தகத்துட் கூட்டிக்
குவிவிருந்தாம் இன்பிசைப்பாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

127. நஞ்சம்உறும் பற்பகுவாய் பணியின் மீது
நடமிடும் திருவடியே நாடி என்றும்
தஞ்சம்உறும் அடிச்சிறியேன் குற்றம் நோக்கித்
தள்ளிவிடேல் மிஞ்சுபெரும் தயைகூர்ந் தென்புன்
நெஞ்சம்உறும் படிகருதாய் எங்கும் ஆம்உன்
நிறைவினுக்கு யான்வேறோ நீக்கு வாயோ
கொஞ்சம்உறும் உணர்வகற்றாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

128. கலைஏந்து மதிவதனம் சாம்பி வாடிக்
கருதுதுரோ பதைமானம் காத்தாய் விண்ணார்
மலைஏந்திப் பசுவினம்மிக் கின்பம் எய்து
மாரிதடுத் தாய்அடியேன் மனத்தை அன்பின்
நிலைஏந்தும் படிபுரிதல் அரிதோ வன்மம்
நின்உளத்தும் இடம்பிடித்து நின்ற தேயோ
கொலைஏந்தும் திகிரியுளாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

129. அளப்பரிதாம் மகிமைநிறை உன்க டைக்கண்
அருள்நோக்கம் பெற்றடியார் அகில மீதில்
வளப்பமிகப் பொலிசித்தி ஆடல் செய்து
வைகுந்த பரமபதம் மன்னி னார்யான்
இளப்பமிகப் புரிமாயை மலகன் மத்துக்
கிலக்காதின் றேன்இரங்கு இருமைப் பேறும்
கொளப்பரிவில் கூட்டிடுவாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

130. தாவில்அண்டப் பருதியினில் உற்ற வான
சராசரங்கள் பெற்றயிலத் தக்க போகம்
ஓவில்அரு ளால்ஊட்டி உறக்கு விக்கும்
உனக்கடியேன் உணர்த்திடுபே ருணர்வுள் ளேனோ
நாவில்இருந் தாட்டும்உன தருளால் உன்சீர்
நவின்றேத்தும் பாக்கியம்யான் நண்ணி நின்றோன்
கூவிஎனை ஆண்டருள்வாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

131. தருவளிக்கும் இந்திரன்ஆ தியர்க்கும் வேண்டும்
சகலசௌபாக் கியமும்இடும் சலசை யோடு
கருவளிக்கும் உடம்பில்இரு வினையின் ஒப்புக்
காட்டிடுபூ தேவியும்தோய் கணவ னாகி
மருவளிக்கும் பங்கயத்தாள் ஆம்அ கண்ட
வைகுண்டம் கூட்டியருள் மகிமை மிக்க
குருவளிக்கும் மேனியுளாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

132. ஈன்றபெருந் தாய்முலைப்பால் உண்ணா வாயின்
இசைப்பிரபந் தப்பொருளாம் இறைவா வஞ்சம்
ஏன்றபெரும் பேய்முலைப்பால் உயிரோ டுண்ட
எம்மானே பொய்ம்மான்மிக் கிசைந்த கீடம்
போன்றஎன்சொல் புனையும்இடம் தோளோ தாளோ
புகலறியேன் புகலறியேன் புலவார் நேமி
கூன்றவளச் சங்கணியாய் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலே.

133. சங்குவள மாநதியின் கரையின் மீதும்
தடத்தினும்பூம் பணைகளினும் தரளம் சிந்தும்
கொங்குவள நாட்டிசையும் கீர நத்தக்
கோயில்பொலி கரிவரத ராஜ மாலைப்
பொங்குவளக் கண்ணருள்இ ராமா னந்தப்
புண்ணியநற் குருதிருத்தாட் புனைஅ கத்தில்
தங்குவள மார்கந்த சாமி போற்றும்
தமிழ்ப்பாவல் லார்கள்இன்பத் தமிழ்ப்பா வாரே.

# 10. காளிங்கநர்த்தனன் பதிகம்

காப்பு வெண்பா

134. தேசமலி சீர்க்கொங்கு சேரும்அணிக் கீரநத்தம்
தேசமலி காளிங்க நிர்த்தனம் தோய்-கேசவன்மேய்த்
தண்துளவத் தார்நேர் தமிழ்த்துதிக்குக் காப்பவன்மெய்த்
தொண்டுடையார் பாதத் துகள்.

135. சீதளபூ ரணமதியம் அனையதிரு முகமும்
சிறுமுறுவற் கனிவாயும் சிறந்தஅருள் விழியும்
போதளவும் துளவாரம் புனையும்அணி மார்பும்
பொருந்துபடைக் கரமும்அணி திருந்திருசே வடியும்
கோதளவும் என்அகத்தும் புறத்தும்எதிர் கண்டு
குளிரும்அநு பூதிஅருட் கொற்றம்அளித் தருள்வாய்
காதளவும் விழியர்நடக் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

136. மெய்முழுதும் கண்ணாகி உன்னதருட் சகுண
மேனிகண்டு கண்டனல்சார் மெழுகெனநெக் குருகி
மைமுழுதும் திரண்டுமழை பொழிந்தனபோல் இருக்கண்
மாரியிடை நனைந்துபர வசம்அடைந்தெந் நாளும்
பொய்முழுதும் தவிர்ந்துநின்சீர் பாடிஉவந் தாடும்
பூரணஆ னந்தசுக போகநிலை எனது
கைமுழுதும் பெறஅருள்வாய் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

137. துக்கமிகும் இவ்வுலக வாழ்க்கைஎனும் தீயைத்
தொடத்தொடவே பற்றிமிகச் சுடச்சுடவே பின்னும்
பக்கமிகும் படிபிடிக்கப் படரும்மனக் குரங்கால்
பட்டசளம் இதுவரையும் பற்றாதோ துளும்பும்
அக்கமிகும் பெருங்கருணை வாரிமுழுக் காட்டி
ஆழ்வார்கள் முன்பெறும்பே ரானந்தம் அருள்வாய்
கக்கமிகும் ஒளிமணிமெய் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

138. ஒட்டாயோ எனதுமல மாயைகன்ம இனங்கள்
ஒன்றும்இலா தென்றும்இன்பம் ஊறஅரு ளமுதம்
ஊட்டாயோ இவ்வுலகத் துயிர்கள்எலாம் உனையே
உன்னிஅருள் வாழ்வுறஎன் னோடுவி ளையாட
மாட்டாயோ கொடுமைநிறை வல்லரக்கர் தமையும்
மறக்கருணை யால்ஆண்ட மகிமைஅருள் வடிவம்
காட்டாயோ பொங்கர்மலி கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

139. ஊனகத்திற் குடியிருந்து மண்ணுடன்பொன் அணியஆர்
உடைபோக பாக்கியம்வேட் டுயங்கிமயங் காதே
நானகத்திற் குடியாக உன்னடியே விழைந்தேன்
நாட்டகத்திற் குடியாக்கா ஞானஅருள் இன்ப
வானகத்திற் குடியாக வைத்தருள வேண்டும்
வரம்பில்அண்ட முற்றம்உண்ட வாயுடனே அளந்த
கானகப்பங் கயம்உடையாய் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

140. சதிக்கும்உல கத்திசைபுன் புலபோக வாழ்க்கை
சதம்எனக்கொண் டுழன்றயர்சஞ் சலங்கள்எலாம் உன்னைத்
துதிக்கும்வகை துவக்கிழல்அத் ததியினில் ஏதொன்றும்
சொல்லாமல் ஓட்டெடுப்பத் தொடங்கும்எனில் எனது
மதிக்குமதி கொடுத்தமைஉன் திருவருட்பே ரின்ப
மயக்காட்சி இசைந்துபர வசம்அடையும் தருணம்
கதிக்கும்இயல் புரைப்பதுவோ கீரநத்தமப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னிலவே..!

141. வந்துவந்து போய்க்கழியும் ஒவ்வொருநாள் களிலும்
மருவும்இன்ப துன்பஉரு வாழ்க்கையின்முன் போல
நொந்துநொந்தும் உவந்துஉவந்தும் இருந்தல்லால் உன்னை
நோக்கிஒரு நிலையில்உறு நோன்பினருள் ளின்பம்
தந்துதந்து தன்மயம்செய் சின்மயபூ ரணநின்
தாள்துணைக்காட் படஅறியேன் றனைவலித்தாண் டருள்வாய்
கந்துகந்துன் றிடும்மறுகார் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னிலவே..!

142. பூப்பாற்றும் உந்திதனில் அயன்உதிக்கப் புரிந்த
பூரணகா ரணஅடியேன் புரிந்தபிழைக் கெல்லாம்
மாப்பாற்றும் படிவிண்ணப் பம்புரிந்தேன் கொடியேன்
மாற்றமுற்றும் திருச்செவியில் ஏற்றருளி இனியாம்
மூப்பாற்றும் துயரமுடன் அந்தகன்கைப் பாச
முடிவாக்கும் செயலும்அற முற்றிலும்என் றன்னைக்
காப்பாற்றும் கடன்உனதே கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியவே..!

143. பொடிமணலிற் கடுவெயிலிற் பதைபதைத்துத் துடிக்கும்
புன்புழுப் போல் வார்த்தையெல்லாம் பொய்பறங்கூ றுதற்கே
நெடித்தமைத்தார் தமைக்கூடிப் பிரியமுடி யாத
நிலையில்அகப் பட்டடியேன் நெஞ்சயர்வ தெல்லாம்
குடியமைந்துள் ளுயிர்க்குயிராம் உண்புடையிங் கெடுத்து
கூறுவதென் நீஅறியாய் கொல்லோமெய் வாழ்வில்
கடித்தமைப்பாய் அடைக்கலம்யான் கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

144. பெற்றெடுத்த தாய்முலைப்பால் உண்ணாத திருவாய்
பேசுபிர பந்தவகை பெறும்பொருளாய் விளங்கும்
முற்றெடுத்த கருணைஅருள் உருவான ஞான
முதல்வாநின் துளவலங்கல் முருகுகமழ் பதத்தில்
பற்றெடுத்த பத்திஒரு சிறிதும்இல்லேன் புனையும்
பாவினையும் ஏற்றருள்வாய் தீவினைவல் லரக்கக்
கற்றெடுத்து விளவெறிந்தோய் கீரநத்துப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனே..!

145. பூவிசையும் கொங்குகமழ் கொங்குவள நாட்டில்
புகழ்இசையும் பதிகளிடை கிகழ்இசைபெற் றமையக்
காவிசையும் வளம்கவின்ற கீரநத்தப் பதிதோய்
காளிங்க நிர்த்தஅருட் கார்மணிமே னியனை
மாவிசையும் சிரவை இராமானந்த குருதாள்
மருவுகந்த சாமிஅன்பின் வாழ்த்திஅணி பதிகப்
பாவிசையும் நாவிசைமெய்த் தொண்டடியார் எல்லாம்
பலஇசையும் பெற்றுயர்வான் பதிஇசைவார் நிசமே.

## 11. கரிவரதராசர் பஞ்சகம்

காப்பு வெண்பா

146. சேடர் நலம்பலவும் சேரும்இயற் கீரநத்தப்
பீடார் கரிவரதப் பெம்மான்மேல்- சூடார்வத்
துத்தியத்துக் கானதுணைஅன் னவன்திருத்தாட்
பத்திஅடி யார்பொற் பதம்

147. சீதளபூ ரணமதிநேர் முகத்தில் இன்பம்
தேக்கும்அருள் பொழிவிழியும் திகழ்புன் மூரல்
மீதலரும் கனிவாயும் படைகள் ஏந்தி
மிளிர்தருசெங் கரநிரையும் விரைதோய் காயாம்
போதனைய திருமேனிப் பொலிவும் பாதாம்
புயங்களும் தாய் மாரும்உறப் புள்ளூர்ந் துன்றுன்
பாதமுடிச் சேவைஅம்பில் வழங்காய் கீர
நத்தமிசை கரிவரத ராஜ மாலே.

148. விடைதாங்கும் கேதனனும் விதியும் மற்ற
விண்ணவரும் எண்ணருட்சீர் விரியும் உன்கட்
கடைதாங்கும் கருணைநெடும் கடலில் மூழ்கிக்
கனல்மெழுகு போலநெஞ்சம் கரைந்து கண்ணீர்
உடைதாங்கும் மேனிஎல்லாம் அருவி பாய
உன்பெருஞ்சீர் ஏத்திஅன்பர் உற்ற ஞான
நடைதாங்கும் படிஅருள வேண்டும் கீர
நத்தமிசை கரிவரத ராஜ மாலே.

149. தேன்பொருந்தும்செங்கமல பீடம் மேய
செல்விகளித் தமையும்மணிச் சிலம்பு போலும்
கான்பொருந்தும் துளபமணி மார்ப! நீஎன்
கருத்தகலா தோங்கும்நிலை கண்டார்க் கந்த
வான்பொருந்தும் பதம்பெரிதன் றென்று காட்டும்
மகிமைநிறை பேரின்ப வாழ்வில் என்றும்
நான்பொருந்து மாறுபுரிந் தருள்வாய் கீர
நத்தமிசை கரிவரத ராஜ மாலே.

# 12 மாரியம்மன் பதிகம்

காப்பு வெண்பா

150. கூரியலார் கட்கருணை கொண்டபுகழ்க் கீரநத்த
மாரியம்மை மீதுதுதி வாழ்த்திசைப்பக்-காரியமும்
காரணமும் தானாய்ஓங் காரத் தலத்தில்அவிர்
வாரண மாமுகன்கா வல்.

அறுசீர் விருத்தம்

151. மணங்கமழ்பூந் தொடைக்கூந்தல் முகிற்கணித்தாய்த்
துலங்குமுக மதியும் காமர்க்
கணங்கமழ்புன் னகைவாயும் அருள்விழியும்
அணிக்கரமும் கலங்கா வாய்மைக்
குணங்கமழ்தொண் டன்பர்உளம் கொண்டதிரு
அடிமலரும் குலவத் தெய்வ
வணங்கமழ்மெய்க் காட்சிஅருள் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

152. பெற்றெடுத்த அன்னைகள்பல் லாயிரர்பே
ரன்பும்இணை பேச லாகா
முற்றெடுத்த கருணைதிரு உருவான
தெய்வீக முதிர்ச்சி சான்ற
பற்றெடுத்த நின்னதருட் சந்நிதிமுன்
அறிவறியாப் பால கன்யான்
மற்றெடுத்தோ துவதென்னே கீரநத்த
பதியில்வளர் மாரித் தாயே.

153. வானாட்டுள் அமைஇமையோர் தாமும்உளந்
ததிசயித்து வழுத்தும் சீரும்
மேனாட்டும் கதிஉணர்வும் தந்துகலி
புருடன்உள்ள வீறாப் போடும்
தானாட்டும் அக்கிரம வழிஒழித்துச்
சன்மார்க்கம் சகத்திற் கூட்ட
மானாட்டு விழியருள்பெய் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

154. கிலையிடுவார் காருணிய நெறியிசைவார்
தம்உளத்தக் கிரமம் மிக்க
ஒலியிடுவார் கோயில்இடு காடாக
ஆடாதி உயிர்கள் மாயப்
பலியிடுவார் நடுநடுங்கி வாய்புதைத்துத்
தொழும்வாக்குப் பலித சித்தி
வலியிடுவாய் ததிஇதுகாண் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

155. கொலைவிரும்பிப் புலையர்அவா அளித்திசையும்
பேயினமும் கோயி லூடாம்
சிலைவிரும்பி ஆணைசெலுத் திடக்கண்டு
துடித்தயர்ந்தேன் தெய்வத் தன்மை
நிலைவிரும்பி வழிபடும்என் நெஞ்சகத்தெண்
ணங்கள்எந்நாள் நீஈந் தாள்வாய்
மலைவிரும்பும் தனத்திருவே கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

156. தன்னலம்தற் பெருமைபொருள் எனக்கருதி
மனம்இறுகித் தருக்கி உற்ற
நன்னலம்முற் றவும்மறந்த அரக்கரைமா
னிடர்ஆக்க நாடும் ஏழை
என்னகத்துன் துணைப்பாதம் ஊன்றில்உல
கொருமூன்றில் இசைவார் யாரும்
மன்னலமுற் றவும்பெறுவார் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

157. தழலைநிகர் பவத்துயரக் கடற்பெருக்கின்
மலமாலை தமது போக்கில்
விழலைஒரு பெரும்பேறாக் காட்டிஅழத்
திடமெலிந்தேன் விளக்கம் மேவக்
குழலைஇசை யாழைஇனி தென்னாத்தாய்
ஆகிஇன்றுன் குழவி ஆவேன்
மழலைமொழி கேட்டருள்வாய் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

158. கருவேற்றி அருமைபெறும் மானிடப்பேர்
உருவேற்றிக் கதியூ டுய்க்கும்
தெருவேற்றி வைத்தனைஈ தென்செயலோ
உன்னதருட் சிறப்பே இன்னம்
திருவேற்றி என்னைமுற்றும் காத்தருள்கை
உன்பரம்என் சிரத்தில் ஞான
மருவேற்றும் பதத்திருவே கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

159. அடியிருத்தி நெஞ்சத்தில் குழைத்துருகும்
அன்பர்களை அழியா வீட்டில்
குடியிருந்தும் பெருங்கருணைத் தாய்நீஉற்
றிடஎனக்கோர் குறைஉண் டாமோ
படியிருத்தும் புகழ்கிரணப் பரசுரா
மன்பெருஞ்சீர் படைத்து வாழ்வான்
மடியிருத்திப் பாலளித்தான் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

160. நோன்புகொன்றுண் ணாமைஎன்கை விளக்கிடவே
யாவர்களும் நோக்கும் வண்ணம்
தேன்புதுமா விளக்கெடுத்துக் கன்னியர்கள்
காட்டும்விழாச் சிறப்பிற் கொண்டு
தான்புகும்உற் றார்களைக்கூய் விருந்திட்டுன்
தரிசனம்செய் தகையோர்க் கெல்லாம்
வான்புதுமெய் விருந்தளிப்பக் கீரநத்தப்
பதியில்வளர் மாரித் தாயே.

# 13. ஸ்ரீமதி பச்சையம்மாள் தீர்த்தக் கிணற்றுத் துதிப்பதிகம்

(கலிவிருத்தம்)

161. கூர்த்தியல் வளம்பொலி கொங்கு நாட்டிடை
கீர்த்திமிக் கமைதரு கீர நத்தமேல்
ஆர்த்திசால் பச்சையம் மாளின் பேர்அறாச்
சீர்த்திசான் றவிர்புகழ்த் தீர்த்தக் கேணியே.

162. அறம்தழை கொங்கு வேளாண் பெருங்குடித்
திறம்தழை செம்பகோத் திரத்தின் சீர்த்திமெய்
மறம்திடாப் பச்சையம் மாள்செய் மாதவம்
சிறந்திசை விரித்திடும் தீர்த்தக் கேணியே.

163. கதிர்கொள்வே லாயுதக் கவுண்டன் றன்னைஉள்
பதியெனப் பணிபுரி பத்தி னித்தகை
மதிநலப் பச்சையம் மாளின் பேர்நிறந்
திதிபுரி வளம்பொலி தீர்த்த கேணியே.

164. மதசலம் பொழிகரி வதனத் தெம்பிரான்
பதசல சம்தினம் பணியும் பக்தர்அற்
புதசலம் ஆட்டியுட் புசிக்கில் சேர்அநு
சிதசல னம்தெறும் தீர்த்தக் கேணியே.

165. பார்வடி வானதாய் பச்சை அம்மையாம்
பேர்வடி வுற்றணிப் பிருந்தை சூடிய
நீர்வடி விறைமெய்மேல் நீர்வ டிந்திடச்
சேர்வடி வுற்றமை தீர்த்தக் கேணியே.

166. பாவையர் தம்முடன் பசுக்க ளின்முலை
நோவைஉற் றயர்ந்திட நுழைந்த தீப்பிணி
யாவையும் இமைக்குமுன் எளிதில் நீக்கிடும்
தேவைசால் புண்ணிய தீர்த்தக் கேணியே.

167. பாபம்ஆ னவைகளைப் பற்று டற்பெருஞ்
சோபம்ஆ னவைகளைத் தொலைத்து மெய்ப்பிர
தாபமாண் கீரநத் தப்ப திக்கிடும்
தீபமா னதைநிகர் தீர்த்தக் கேணியே.

168. வெம்மைமிக் குற்றதீ வினைத விர்த்துயிர்க்
கிம்மைஆ கியதரும் இனிய மூர்த்திகள்
தம்மையேய் கீரநத் தப்ப திக்கிசைச்
செம்மைமிக் களித்திடும் தீர்த்தக் கேணியே.

169. ஊற்றிசை நீர்இலை உதவிப் பூசனை
ஆற்றிசை யோர்க்கரி யாதி கோயிலும்
சாற்றிசை விநாயக சத்வித் யாசபை
தேற்றிசை யும்பெறும் தீர்த்தக் கேணியே.

170. ஆடுதிர் என்கண்நீர் அமலன் மெய்ப்புகழ்
பாடுதிர் அவன்துணைப் பாத பங்கயம்
கூடுதிர் உள்ளமேற் குறைவில் அன்பையே
தேடுதிர் என்றிசை தீர்த்தக் கேணியே.

171. வரம்பொலி பச்சையம் மாள்பொ ருந்திசைப்
பரம்பரை யோர்க்கும்அப் பதியி டத்தில்வாழ்
உரம்பொலி பிறர்க்கும்ஈண் டுயர்தன் மப்பெருந்
திரம்பெறக் காட்டிடும் தீர்த்தக் கேணியே.

# கீரநத்தத் திருப்புகழ்

## விநாயகர்

172. தானதத்த தானன..... தனதானா

பீதகத்தின் மால்கொடு பூதலத்து லாவிடு
பேய்நிகர்த்த ஈனரொ - டுழலாதே
பீடுபெற்ற மாதவர் சேகரத்தி னூடடி
பேணும்ஒப்பில் மாதவம் - முயலேனோ
ஆதரத்தி னோடிடை யீடுசற்று றாதுன
தாரணத்தின் மீதமை - இருதாளே
ஆலயத்தில் நாளும்எ னாதகத்தின் மாடுற
ஆம்அவைக்குள் யான்உற - அருள்வாயே!
பாதகத்தின் மூழ்கன லாசுரற்கொர் மாயைசெய்
பாழ்உடற்பு காதருள் - புரிவோனே
பார்வதிக்குள் ஆவல்கு லாவுமெய்ச்சு தா!வழி
பாடியற்று வார்இடர் களைவோனே!
கேதம்மிக்க பார்இழி வாழ்வைமெச்சி யேநுழை
கீடம்ஒத்து ளேன்உளம் உறும்நாதா
கேசவற்கு மாமரு கா! சுரர்க்கு நாயக!
கீரநத்தம் மேவிய பெருமாளே.

பதவுரை:

**பீதகத்தின் மால்கொடு** - பொன்னாசை கொண்டு

**பூதலத்து உலாவிடு-** உலகில் திரிகின்ற

**பேய்நிகர்த்த ஈனரொடு-**பேயைப்போன்ற இழிந்தவர்களோடு

**உழலாதே-** அடியேனும் சேர்ந்து சுழலாமல்

**பீடுபெற்ற மாதவர்-** பெருமை மிக்க தவசிகளின்

**சேகரத்தினூடு-** கூட்டத்துடன் சேர்ந்து

**அடிபேணும் -** அவர்களைப் பணிகின்ற

**ஒப்பில் மாதவம்-** இணையற்ற தவமுயற்சியில்

**முயலேனோ-** ஈடுபடமாட்டேனோ?

**ஆதரத்தினோடு-** கருணை கூர்ந்து

**ஆரணத்தின் மீது அமை-** வேதத்தின் உச்சியிலே உள்ளதாகிய

**உனது இரு தாளே-** தேவரீரது இரண்டு திருவடிகளே

**நாளும் இடையீடுசற்று உறாது -** எப்போதும் சற்றும் நீக்கமே இல்லாமல்

**எனாது அகத்தின் மாடு-**அடியேனின் உள்ளத்தின்

**கண் ஆலயத்தில் உற-** திருக்கோயிலில் எழுந்தருளி இருப்பதைப் போலவே விளங்கவும்

**ஆம் அவைக்குள் யான்உற-** அவ்வாறு கோயில் கொண்டுள்ள அத்திருவடிகளுக்குள் அடியேன் தஞ்சம் அடையவும்

**அருள்வாயே-** திருவருள் புரிய வேண்டும்

**பாதகத்தின் மூழ்கு-** உலகங்கள் அனைத்தையும் அழித்தலாகிய கொடுமையில் ஈடுபட்ட

**அனலாசுரற்கு-** அனலாசுரனுக்கு.

**ஓர்மாயைசெய் பாழ் உடல் புகாது-** அவன் மாயையின் காரியமாகியதும் உயிரை இழிநிலைக்குத் தள்ளுவாதுமாகிய உடம்பில் புகாதபடி (தான் எடுத்து விழுங்கிவிட்டதால் மறுபிறவி இல்லாதாவாறு).

**அருள் புரிவோனே -** மறக்கருணை காட்டியவரே!

**பார்வதிக்கு உள் ஆவல் குலாம் மெய்ச்சுதா-** உமையம்மைக்கு மன மகிழ்ச்சியளிக்கும் நிலைத்த மைந்தரே!

**வழிபாடு இயற்றுவார் இடர் களைவோனே-** பூசிப்பவர்களுக்கு நேரும் இடையூறுகளை நீக்கி அருள்புரிபவரே!

**கேதம் மிக்க பார் இழிவாழ்வை மெச்சியே-** துன்பம் நிறைந்த தாகிய இழிந்த உலகியற் சிறப்புகளை விரும்பி

**நுழைகீடம் ஒத்துளேன் உளம்** - அவ்வாழ்வில்
ஈடுபடுகின்றவனும் ஒரு புழுவை
நிகர்த்துள்ளவனுமாகிய அடியேனின் (இழிந்த)
மனத்தின் கண்ணும்.

**உறும் நாதா**- இருக்கின்ற தலைவரே!

**கேசவற்கு மாமருகா**- திருமாலுக்கு பெரிய மருமகனே!

**சுரர்க்கு நாயக** - தேவர்களுக்குத் தலைவனே!

**கீரநத்தம் மேவிய நாயக**- கீரநத்தம் என்னும் தலத்தில்
கோயில் கொண்டுள்ள தலைவரே!

*கருத்துரை:* அனாலசுரனை ஆட்கொண்டவரே! உமாதேவியின் மைந்தரே! அடியார் இடுக்கண் களைபவரே! இழிந்த உலகியல் வாழ்வில் விருப்பத்தோடு ஈடுபட்டுள்ள எளியேனின் உள்ளத்திலும் உறைபவரே! மால் மருகா! தெய்வ நாயக! கீரநத்த விநாயகரே! பொருளாசை மிக்கவர்களோடு சேர்ந்து அவர்களைப் போற்றுவதாகிய தவம் புரியேனோ! (புரிய வைக்க வேண்டும் என்பது கருத்து) உம் திருவடிகள் எளியேனின் உள்ளத்தில் விளக்கமாகத் தோன்ற நான் அவற்றைத் தஞ்சமாக அடையுமாறு திருவருள் புரிவீராக!

173. தானனத் தத்தன தானன- தனதானா

சாகரத் திற்பொலி வார்அலை
போல்மதித் தற்கரி தாகிய
சாரம்மிக் குற்றமை ஆரணம் - முதலாம்நூல்
தாம்உதித் தற்கொரு தாய்நிகர்
ஆம்எழுத் துக்குல மேதரு
தாரகத் துட்பொரு ளாய்அவிர் - முதலாநீள்
ஏகமெய்ச் சிற்பர மோனவை
போகமுத் திச்சுகன் ஆம்உனை
யேதுதித் துக்களி கூர்நலம் - அகலாதே
ஏழைமுற் பொற்பிசை மூடிக
வாகனத் துற்றரு ளால்உன
தேடலர்ப் புத்தடி சூடிடல் - எதுநாளோ

காகம்ஒத் துக்குறு மாமுனி
நீள்கடத் திற்பொலி காவிரி
காழியிற் புக்குலர் காவிரி - தரஆள்வாய்
கானகத் திற்கவ ணோடிசை
மாதணிப் பொற்குயம் வேள்ஒளி
கால்புயத் துற்றிடு மாறருள் - இபம்ஆவாள்
கேகயத் திற்பொலி சாயல்மி
னார்நகைக் கட்டற வேவிரி
கேழலர்ப் பொற்பத வாழ்வருள் - குருநாதா
கேழல்மெய்ப் பத்தர்அ வாவிய
பேறுமுற் றத்தரு வான்உயர்
கீரநத் தப்பதி மேவிய - பெருமாளே

174. தானனத் தத்த தானன - தனதானா

பாரகத் தொப்பில் மானிட மேனிபெற் றிட்ட பேர்வழி
பாடியற் றிச்ச தாஉன - திசைதானே
பாடிஅர்ச் சித்து மாதவ மேல்நிலைக் கட்கு லாவிடு
பான்மையுட் சற்றும் ஓர்கில - தவமாயா
கோரமுற் றிப்பல் வாதனை மேவிஎய்ப் புற்ற நான்அநு
கூலமெய்ப் பத்தி மேல்நிலை - பெறுமாறே
கோமளப் பொற்பு மூடிக மீதில்உற் றற்பு தாகா
கோலம்உற் றிட்ட தாண்முடி - புனைவாயே
பாரதத் தைப்பொன் மேருவி லேபொறித் திட்ட கோடொரு
பாணியிற் பற்றி வானவர் - துயவரோடே
பாதகக் கொற்றமார்கய மாமுகற் செற்ற சேவக
பாவலர்க் கிச்சை யாவையும் - இடுகோவே
கீரம்ஒத் திட்ட பாடல்கள் ஓதவைத் துற்ற மாயைசெய்
கேதமுற் றற்ற பேரருள் - குருவாவாய்
கீதவிற் பத்திமேவினர் தோய்இசைக் கற்பு நீடிய
கீரநத் தத்தின் மேவிய - பெருமாளே.

# தண்டபாணி திருப்புகழ்

175. தனதானதத்தத் தனத்தந்த தானதன- தனதானா

கடலார்கயற்கொத் தமைக்கண்க ளாலுமணம்
மிகுவாரிசப்புட் பம்ஒக்கும்கை யாலும்மிகு
கதிர்வீசுநற்பொற் பணிக்கொங்கை யாலும்மயில்
இடும்மானார்
களிகூர்தரத்தக் கசொற்கண்டு பேசியவர்
இடும்ஏவலுக்கும் சலிப்பின்றி ஓடுமவர்
களைநீடுசுற்றத் தினிற்கொண்டு பாழில்மனம் அலையாதே.
அடலார்சிறைக்குக் குடத்துங்கம் வாழிஎன
இடிபோல்முழக்கித் தமிழ்ச்சந்தம் ஓதும்உயர்
அருளாண்மைமிக்குற் றுவர்க்கும்த போதனர்தம்
அவைதோய்வான்
அருணாச்சலபொற் றளிக்கண்கொள் கீழ்சிகரி
பொலிநாதனுக்குட் களிப்பொன்ற நீமுன்அருள்
அநுபூதியைச்சற் றெனக்கிந்த நாளில்உறும்
வகைஈவாய்
குடநேர் தனத்திற் சுரக்கின்ற பால்அருளி
அறுமீன்வளர்க்கத் துவர்ப்பண்பின் மேனிகொடு
குளிர்தாமரைத்தொட் டிலிற்சிந்தை ஓகையுடன்
வளர்சேயே.
குணவாசவற்குச் சிறப்பின்பம் மேவவரு
மகள்வாடவிட்டுப் பரற்கொண்ட சாரலிடை
குறமாதைமெச்சித் துதித்தின்ப ஆடல்பல புரிவோனே.
மடநீடும்அற்பக் குணப்பங்க ரோடு புவி
மனைமாதர்வித்தத் தினிற்பொங்கும் ஆவல்கொடு
மடியாதெனைக்கைப் பிடித்தன்பில் ஆளவரு குருநாதா.
மருதாசலச்சற் குணத்துங்க மாதவன்மெய்
வழிபாடுபெற்றுத் தமச்சொந்த வாழ்வருளி
வளர்கீரநத்தப் பதிக்கண் குலாவமரர் பெருமானே.

176. தத்தன தனன தான - தனதானா.

எத்தனை உரிய தாதை எத்தனை இனிய தாயர்
எத்தனை மனையின் மாதர் - உலகூடே
எத்தனை பெயர்கள் பாலர் எத்தனை துணைவர் பூமி
எத்தனை நகரம் நாடு - கழிவார்நாள்
இத்தரை நிகழும் நாளில் மற்றினி எதிர்கொள் காலம்
எப்படி அமையு மோமெய் - தெரியேனே.
இப்பிறவியில்வி டாதுன் நற்பத வசை மான
திற்புக அருள்செய் பாரம் - உனதேயாம்
முத்தன முறுவல் கூடும் உத்தமி அணிகொள் கோதை
முத்தமிழ் இனிய பாடல் - அதனோடே
மொய்த்திரள் அணியல்சூடும் அற்புத கருணை ஞானம்
முற்றிய ஒளிகு லாவு - மணிமார்பா
வித்தகர் இதயம் ஆவல் பெற்றவிர் கவிகள் ஓது
வித்தென துளம்நி லாவு - குருநாதா
மிக்கவிர் பரவுகீர நத்தமெய் நகர்கொள் கோயில்
மெய்க்கரி வரத ராஜ - பெருமாளே.

177. தத்த தனனா தந்ததான - தனதானா.

நித்தம் உனையே சிந்தையூடு சற்றும் அகலா தன்பினோடு
நிச்ச யவிவே கம்கொள்சீலர் - அகமேதோய்
நித்தியசுகா னந்தஞான மெய்ச்ச கசமாய் நின்றறாத
நிட்டை அடியேன் நெஞ்சுமீது - பெறுமாறே
ஒத்த சதுர்வே தம்குலாவு சட்ச மயமார் தொண்டர் நாடல்
உற்ற வடிவாய் நின்றுலாவுன் - இருதாளே
ஒப்பில் பரமா னந்தவாரி கொட்ட விழிநேர் வந்துநீஎன்
உச்சி மிசைசூ டும்திவாவும் - உளதேயோ
சுத்த நிலைதோய் அன்பின்ஓது நற்ற மிழின்மால் கொண்டுநீடு
துத்தி அணையாய் ஒன்று பாய்கொ - டகல்கோவே
சொர்க்கஉலகோர் துன்பமார மிக்கஇடையூ றென்று மேசெய்
துட்டர் கிளைசா டும்தயாளம் - நிறைதேவே

நத்த ணிமினார் மைந்தரான பித்த மைவுறா தின்பம்ஈயும்
நற்ற வவிசா லம்குலாவு - குருவாவாய்
நச்ச ணிகொள்கா ளிங்கமீது நிர்த்த வடிவாய் அன்பர்கீர
நத்த மிசைதோய் கொண்டலான - பெருமாளே.

## ஸ்ரீ மாகாளியம்மன் துதி

எழுசீர் விருத்தம்

178. சீதள மதியம் நிகர்திரு முகமும்
செந்துவர் வாய்உமைக் கண்ணும்
போதன கரமும் பாதபங் கயமும்
பொலியஎன் விழியெதிர் தோன்றிப்
பாதகக் கலியின் வலியொழித் துண்மைப்
பயன்உல கெவற்றினும் பதியக்
காதல்மிக் கருள்வாய் கீரநத் தத்தில்
கவின்கொள்மா காளிஎம் தாயே.

## மங்கையம்மன் துதி

எழுச்சீர் விருத்தம்

179. சித்தியிற் பெரிய ராஜகோ பாலத்
திருப்பெய ரினனுடன் உதித்துப்
பத்தியிற் பணிசெய் மாதவச் சிறப்பாற்
பாரியல் மானிடர் யாரும்
துத்தியம் புரியும் தெய்விக வடிவம்
தோய்ந்தவிர் கீரநத் தத்தின்
மத்தியிற் கோயில் கொண்டுவீற் றிருக்கும்
மகிமைசால் மங்கையம் மாளே.

# உத்தண்டராயர் துதி

இரட்டையாசிரிய விருத்தம்

180.

திருமேவு கீரநத் தப்பதித் தெற்கான
திக்கினிற் காரைநாமத்
தீர்த்தமார் சுனைஉண்டு செய்துபரி வாரமாத்
திகழ்பெரிய நாயகியம்மை
தருமேவுகுப்பாண்டை ராயர்கா ருணியத்
தழைத்தவிர் கருப்பராய
சாமியுடன் ஆதிதே வானகண பதிஉவகை
தங்கும்ஆ லயம்இசைந் தே
மருமேவு மலர்மாலை பட்டுடைபு னைந்து கதிர்
மணியணிப் பணிகள்மின்ன
வையாளி யார்குதிரை மீதுசா ராளமா
மாட்சிபெறு காட்சிஉதவி
உருமேவு தன்னைமெய்க் குலதெய்வம் எனவிழா
ஓம்புநர்க் கருள்புரிந்தே
ஒத்தண்டர் வாழ்வில்உற வைத்தண்டி வாழஅமை
உத்தண்ட ராயஇறையே.

வாழிவிருத்தம்

181. வாழி கீரநத் தம்தண்ட பாணிமா மயில்யேல்
வாழி நீறுகண் டிகைஎழுத் தாறுநான் மறைநூல்
வாழி மெய்க்கவு மாரராமானந்த வரதன்
வாழி அன்னவன் தொண்டர்நன் மைகள்எலாம் மாதோ

வாழி வெண்பா

182. கீரநத்தம் வாழி கிளர்விக்கி னேச்சுரன்தாள்
சாரநத்தும் தொண்டடியார் தாம்வாழி - பாரனைத்தும்
பெற்றநலம் முற்றம்மிகப் பீடார்ந்து வாழிநலம்
கற்றசத்வித் யாசபைவாழ் க.

## வாழி விருத்தம்

183. மாணியல் கீரநத்தம் வாழிஐங் கரத்தன் தண்ட
பாணியன் வரத ராஜப் பண்ணவன் முதலோர் பாதம்
பேணிசை அடியார்வாழி பெய்முகில் புலவர் கற்பு
நாணிசை மாதர்ஆண்கள் நலமெலாம் வாழிவாழி.

## வாழி வெண்பா

184. கீரநத்தம் வாழி கிளர்தே வினம்வாழி
வாரமுற்ற தொண்டர்கற்பு மங்கையர்ஆன் - சாரமிக்க
எல்லா நலமும் இகதலமேல் மங்களமாய்ப்
பல்லாண்டு வாழியப்பண் பால்.

தெய்வமே துணை.



*பின்னிணைப்பு*

## சிரவையாதீனம் மூன்றாம் குருமகாசந்நிதானம்

## தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் அருளிய

# கீரநத்தம் சென்னியாண்டவர் பதிகம்

கோவையிலிருந்து சத்தியமங்கலம் செல்லும் பெருவழியில் சரவணம்பட்டியை அடுத்த இரத்தினகிரிக்கு (சரவணம்பட்டிக் கரடு என்றும் கூறுவர்) வடக்கே உள்ளது கீரநத்தம் என்னும் சிற்றூர். அங்கு ஏறக்குறைய 1865 வாக்கில் தோற்றுவிக்கப்பட்டது சென்னியாண்டவர் என்னும் முருகப் பெருமான் திருக்கோவில், தைப்பூசம், சிவராத்திரி முதலிய திருவிழாக்கள் இங்கு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்தன.

பழைய ஆலயம் கால வெள்ளத்தால் பழுதடைந்துவிட்ட படியால், புதியதாகக் கருங்கல்லால் திருப்பணிசெய்யப்பெற்று 3-6-1965 அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்பொழுது இந்தப் பதிகம் இயற்றிப் பதிப்பிக்கப்பட்டது.

இது காப்புவெண்பா ஒன்று, நூலாக எழுசீர் ஆசிரிய விருத்தங்கள் 12 என மொத்தம் 13 செய்யுள்களால் யாக்கப்பெற்றுள்ளது. சென்னியாண்டவனே என்பது இதன் மகுடம் ஆகும். இப் பதிப்பில் அகத்தியர், அருணகிரிநாதர், மாணிக்கவாசகர், நக்கீரர், சிரவை இராமானந்த சுவாமிகள், கீரணம் மருதாசல சுவாமிகள் ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இது மிக எளிய நடையில் அமைந்துள்ளதோர் தோத்திரம் ஆகும். ஆக்கியோன் பெயர் வெண்பா ஒன்றால் இறுதியில் கூறப்பட்டுள்ளது.

பதிகத்தை அடுத்துத் திருப்புகழ்ப்பா ஒன்றும் வாழ்த்து விருத்தம் ஒன்றும் உள்ளன. திருப்புகழில் முருகப்பெருமானின் அம்சமே திருஞான சம்பந்தர் என்னும் கருத்து இடம்பெற்றுள்ளது.

காப்பு வெண்பா

**சீர் அனைத்தும் நல்கித் திகழ்சென்னி ஆண்டவன்மேல்**
**கீரநத்தத் தின்று கிளத்துதுதி – பார் அனைத்தும்**
**போற்றும் புகழில் பொலியத் துணை மயிலும்**
**வேற்படையும் சேவலும் ஆம்; மெய்.**

**இன்று – இந்நாள், இப்போது. கிளத்து – செல்லுகின்ற. துதிபொலிய (மயில், வேல், சேவல்) துணை ஆம். (இது) மெய் என்றவாறு.**

## நூல்

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

திருவளர் கயிலைச் சிவபிரான் விழியில்
தீப்பொறி யாகிவந் தாறாம்
உருஅமைந் துமையாள் உதவுபால் அருந்தும்
ஒருவனே ! கருஅநே கத்தில்
மருவிடா தென்னைக் காத்தருள் புரிய
மயில்மிசை ஒருதரம் வருவாய் –
அருஉரு ஆவாய் ! கீரணப் பதிவாழ்
ஐயனே ! சென்னியாண் டவனே ! 1

கஞ்சமா மலரோன், மாயவன், மதவேள்
காலன்என் றிடுமவர் கரத்தில்
தஞ்சம்ஆய் அடியேன் நைவுறா தாண்டுன்
சரணம்ஏத் திடஅருள் தருவாய் –
வஞ்சமா மரம்ஆம் சூரனைத் தடிந்து,
வானவர் தமக்கருள் வழங்கி
அஞ்சல்ஈந்த தருள்வோய் ! கீரணப் பதிவாழ்
அண்ணலே ! சென்னியாண் டவனே ! 2

கயிலையில் உமையாள் காற்சிலம் பிடையே
கவினவந் திடுநவ வீரர்
பயிலவாழ் இலக்கம் வீரர்பூ தரும் சூழ்
பரமனே ! பாரினில்ப் பலஆம்
சயிலம்முற் றாடல் புரிஇரு சரணச்
சண்முகா ! விண்உளோர் பரவும்
அயில்அணி புயனே ! கீரணப் பதிவாழ்
அமலனே ! சென்னியாண்டவனே ! 3

1. வந்து ஆறு ஆம். உமையாள் – பார்வதி. அநேகக் கருவில் என மாறுக. கணக்கற்ற பிறவிகளில் மருவிடாது – பொருந்தாது. பிறக்காமல். அருஉரு ஆவாய் – நிர்க்குணம் சகுணம் ஆகிய இரண்டு வடிவங்களையும் ஏற்பவரே. உம்மைத் தொகை.
2. கஞ்ச மா மலரோன் – தாமரையாகிய சிறந்த மலரில் இருக்கும் பிரமன். மதவேள் – மன்மதன். காலன் – இயமன். நைவுறாது – வருந்தாமல். ஆண்டு – ஆட்கொண்டு. வஞ்ச மாமரம் ஆம் – வஞ்சிக்கின்ற (மாறுவேடமாய் அமைந்த) மாமரத்தின் வடிவத்தில் இருந்த. அஞ்சல் – அபயம்.
3. முருகப்பெருமானின் தோற்றத்தை அடுத்துப் பார்வதி தேவியின் சிலம்பின் நவரத்தினப் பரல்களிலிருந்து வீரவாகு முதலிய நவவீரர்கள் தோன்றிய கந்தபுராண வரலாறு வெளிப்படை. அவர்களுக்குப் படை வீரர்களாக அமைந்தோர் நூறாயிரவர். பூதர் – பூதகணங்கள். சயிலம் முற்று – மலைகள் அனைத்திலும், முற்றும்மை விரிக்க. சரண – திருவடிகளை உடைய. அயில் அணி – வேலாயுதத்தை ஏந்தியுள்ள.

உரகபூ டணன்ஆம் பரமனுக் கந்நாள்
ஓதிய தாரகப் பொருளைக்
கரகம்ஏந் தியகைக் குறுமுனி, கிள்ளை
காதுறக் கேட்க, முன் உரைத்தாய்;
இரவொடு பகலும் உன்பணி புரியும்
ஏழையேன் தனக்கும்ஓ திடுவாய் –
அரகர ஒலிச்சீர்க் கீரணப் பதிவாழ்
அத்தனே ! சென்னியாண் டவனே ! 4

நாயினும் கடைஆம் பலபிறப் பெய்தி
நலிந்திடும் என்றனை இரங்கித்
தாயினில் எடுத்தாண் டருள்புரி முருகா !
சரவணா ! சண்முகா ! குமரா
காய்இரும் பனைய குடுமிதோய் சேவல்
கவின்றிடும் கொடிஉளாய் ! கவின்பேர்
ஆயிரம் உள்ளாய் ! கீரணப் பதிவாழ்
அதிபனே சென்னியாண் டவனே ! 5

ஊனையே விரும்பி உண்டிடும் நீசர்
உறவைவிட் டுன்திருத் தொண்டும்
தேனைநேர் பாடல் செப்பிஏத் திசையும்
சேர்த்திட அருள்செய் வேல்ச் சேயே !
மானைநேர் விழியார் இருவர்தன் பாகம்
மருவிட மயில்மிசை தகரில்,
ஆனையில் வருவாய் ! கீரணப் பதிவாழ்
அற்புதா ! சென்னியாண் டவனே ! 6

4. உரக பூடணன் ஆம் – பாம்பாகிய அணிகலன்களை அணிந்தவர் ஆகிய. தாரகப் பொருள் – பிரணவத்தின் அர்த்தத்தை. கரகம் – குண்டிகை. குறுமுனி – அகத்தியர். கிள்ளை – கிளி வடிவில் இருந்த அருணகிரிநாதர்.

5. தாயினில் – அன்னையைப் போல. காய் இரும்பு அனைய – காய்ச்சப்பட்ட இரும்பினைப் போலச் செந்நிறம் வாய்ந்த. குடுமி – கொண்டை.

6. நீசர் – இழிந்தோர். ஏத்து இசையும் – போற்றுவதால் கிடைக்கும் புகழும். சேர்ந்திட – அடியேன்பால் பொருந்தும்படி. தகரில் – ஆட்டுக்கடா வாகனத்திலும். இந்த மூன்று ஊர்த்திகளும் முருகனுக்கு உண்டு.

பெருமறை பலவும் பேசிட முடியாப்
பெரும்புக ழுடையவேற் பிரானே !
உருமறைத் தந்நாள் வள்ளிநா யகிமா
உவந்தவா ! சிவந்தமே னியனே !
திருமறை யவனைக் குட்டி, வன் சிறையில்
தளர்வுறத் தளைசெயும் தலைவா !
அருமறைக் கரியாய் ! கீரணப் பதிவாழ்
ஆதியே ! சென்னியாண் டவனே ! 7

குருந்தமா மரத்தின் கீழ்இருந் தன்று
குதிரைவாங் கிடவரும் தொண்டன்
பெருந்தவம் ஆகி ஆண்டருள் பெருமான்
பெற்றருள் வெற்றிவே லவனே !
பொருந்தருள்க் கவுமா ரப்பெரு நெறியில்ப்
புனிதமெய்த் தவம்செயும் பெருமை
அருந்தவர் மருவும் கீரணப் பதிவாழ்
அமரனே ! சென்னியாண் டவனே ! 8

கொடியதாம் கொலையும் புலையும்அற் றுண்மை
குலவிய நியமசீ லர்களாய்
நெடியவேல் தண்ட பாணிசந் நிதிமுன்
நின்றுபோற் றிப்பணிந் தேத்திப்
பொடிகொள்வெண் ணீறும் அக்கமா லிகையும்
பூண்டுமெய்த் தவம்செய்வோ ராகும்
அடியவர் பலர்தோய் கீரணப் பதிவாழ்
அப்பனே ! சென்னியாண் டவனே ! 9

7. உருமறைத்து – கிழவனாக மாறுவேடம் பூண்டு. மா – தினை மாவை. திருமறையவன் – பிரமன். தளை ஏசயும் – பிணிக்கின்ற. மறைக்கு அரியாய் – வேதங்களாலும் எட்ட முடியாதவரே.

8. அன்று – அக்காலத்தில், ஒன்பதாம் நூற்றாண்டில் தொண்டன் – மாணிக்கவாசகர். திருப்பெருந்துறையில் (ஆவுடையார் கோவில்) மணிவாசகரை ஆட்கொண்ட வரலாறு வெளிப்படை. அருள் பொருந்து என மாறுக.

9. நியம சீலர் – இப்படித்தான் ஒழுக வேண்டும் என வரையறைக்கப்பெற்ற ஒழுக்கத்தை உடைய மேலோர். அக்க மாலிகை – உருத்திராக்க மாலை.

நீறுதோய் உருவும் தண்டமும் குலவ
நீடருள்ப் பழனியில் நின்றாய் !
வீறுதோய் அசுரர் குலம்அறக் கறுவும்
வெற்றிவேற் படையினை உடையாய்!
ஊறுதீர்ந் திடநக் கீரன்ஓ தியபா
உவந்தவா ! பன்னிரு புயத்தெம்
ஆறுமா முகனே ! கீரணப் பதிவாழ்
அழகனே ! சென்னியாண் டவனே ! 10

விண்ணவர் தாமும் போற்றுயர் பொதியை
மேவகத் தியன்கலை ஆகி
எண்அரும் புகழ்க்கௌ மாரநல்ச் சபையில்
இலங்கிரா மானந்த முனிவன்
கண்அருள் பெற்றுத் தவமுயல் பெருமை
கவின்மரு தாசலப் பெயர்தோய்
அண்ணல்வாழ் வமையும் கீரணப் பதிவாழ்
அருளனே ! ன்னியாண் டவனே ! 11

பாடுவார்; பாடிப் பரவுவார்; பத்திப்
பணிபல இயற்றி உந்தனையே
நாடுவார்; நாடித் தேடுவார்; உன்பேர்
நவிலுவார் ; நாள்தொறும் உன்பால்
கூடுவார்; பலரும் காவடி தோளில்க்
கொண்டுமெய் மறந்துவந் தன்பால்
ஆடுவார்; பலர்சேர் கீரணப் பதிவாழ்
அறவனே ! சென்னியாண் டவனே ! 12

10. ஊறு – கற்கி முகி என்னும் பூதத்தால் தனக்கு நேர்ந்த துன்பம். நக்கீரன் ஓதிய பா – திருமுருகாற்றுப்படை. இவ்வரலாறு வெளிப்படை.

11. இராமானந்த சுவாமிகள் அகத்திய முனிவரின் அம்சமாகத் தோன்றியவர் என நாடி சோதிட நூல்களிலும் கூறப்பட்டுள்ளது. கீரணம் மருதாசல சுவாமிகள் – இவர் யாதவர் மரபில் தோன்றியவர். ஓரளவு படித்தவர். இல்லறத்தில் இருந்தவர். வினை வசத்தால் இவருக்கு கொடிய நோய் ஒன்று வந்தது. சிரவை இராமானந்தரை அடைந்து நோய் நீங்கப் பெற்றார். பிறகு தவநெறி ஏற்றார். 29–1–1923 அன்று இவருக்கு இராமானந்த சுவாமிகளால் கல்லாடை வழங்கப்பட்டது. இவர் 1932இல் தம் ஊரில் தண்டபாணி ஆலயம் ஒன்றை நிறுவினார். 1956 இல் இறையருளில் கலந்தார்.

12. பலர் சேர் – பாடுதல் முதலாகக் கூறப்பெற்ற பல்வேறு வழிகளிலும் பணிபுரிகின்ற அடியார்கள் பலர் கூடுகின்ற.

### விண்ணப்பம்

(வெண்பா)

அன்பர் பரவுசென்னி ஆண்டவனே ! கீரணத்தூர்
இன்பம் உற மேவும் இறையவனே ! – நின்பதத்தில்
சுந்தரப்பேர் தோய் அடியேன் சூட்டும் இப்பாக் கற்பவர்க்கு
வந்தருள்வாய் வேண்டும் வரம்.

## திருப்புகழ்

**தன்ன தாந்தன தானான தத்தத் தனதானா**

கன்னல் ஏந்துகை வேளால்இ டர்ப்பட் டுழலாதே
கண்ணி வாய்ந்தபுள் போல்ஆசை உற்றிட் டயரா்தே
மின்னல் போன்றொளிர் வேலொட திர்ப்பட் டடியேன்நேர்
வெம்மை யாம்பவ நோய்மாய்வு றச்சற் றருள்வாயே
தென்னன் நீண்டுற மாண்நீற ளித்துப் புரிவோனே!
செம்மை தோய்ந்துள சீர்ஆர்உ ருப்பெற் றவிர்சேயே !
செந்நெல் ஆர்ந்தவிர் சீகாழி உற்றுத் திகழ்வோளே !
சென்னி யாண்டவ னே ! கீர நத்தப் பெருமானே !

### வாழ்த்து

(கலி விருத்தம்)

சென்னி யாண்டவர் கோயில் திருப்பணி
உன்னிப் புரிந்தவர், ஓங்கு கும்பநீர்
தன்னைப் பெய்தவர், சார்ந்து போற்றுவோர்
சொன்ன நலம்எலாம் துய்த்து வாழ்கவே !

வந்து வேண்டும் வரம் அருள்வாய்.

கன்னல் – கரும்புவில். கண்ணி வாய்ந்த புள்போல் – வலியைற் சிக்குண்ட பறவையைப் போன்று. எதிர்ப்பட்டு – நேரில் தோன்றி. வெம்மையாம் – கொடிய. பவநோய் – பிறவிப்பிணிமாய்வுற – ஒழிய. தென்னன் – பாண்டியன், கூன் பாண்டியன் நின்ற சீர் நெடுமாறனாகத் திருஞான சம்பந்தரால் நிமிர்ந்தது வெளிப்படை. இவ்வாசிரியர் சம்பந்தப்பெருமான் முருகனுடைய அம்சம் வாய்ந்தவர் என்னும் கொள்கையை உடையவர். சீர் – சிறப்பு. சீகாழியில் தோன்றியவர் திருஞானசம்பந்தப்பெருந்தகை.

உன்னி – செய்ய வேண்டும் என நினைத்து.



உன்னையே தந்தை தாய் எனக்கருதி
உளம் களிகூர்ந்து நான்இருக்க,
என்னையே வாதிபோல நீ எண்ணி
இடர்செயில் யான் என்ன செய்வேன்?
கன்னிகை ஈன்ற கருணை வாரிதியே!
கடுகியே மயில்மிசை வந்து
தன்னியன் ஆக என்னை ஆண்டருள்வாய்;
சரவணானந்த சண்முகனே!

- தவத்திரு இராமானந்த சுவாமிகள்

திரு அளிக்கும் பெரும் கல்வியும் நல்கிடும்; சேண் உலகுஆர்
தரு அளிக்கும் பதம் யாவையும் ஈந்திடும்; தன் அனைய
உரு அளிக்கும்; தொண்டர் எண்ணிய யாவும் உடன் அளிக்கும்;
மரு அளிக்கும் பொழில் சூழ் மரு தாசலன் வண்பதமே

- தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

